# செந்தமிழ்ச் செல்வி




உள்ளுறை



சிலம்பு-௫௭] வள்ளுவர் ஆண்டு-௨0௧௪, ஆடி, Aug'83 [பரல்-௧௨

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

எம்.ஏ., பிஎச்.டி.

௧. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

௨. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

௩. பேராசிரியர் ச. அகத்தியலிங்கம், தமிழ்த்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அண்ணாமலை நகர்.

௪. முனைவர் பொன் சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர், திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

௫. முனைவர் பொன் கோதண்டராமன், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

௬. முனைவர் கு. பரமசிவம், எம். ஏ., பிஎச்.டி., தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

௭. பேராசிரியர் கு சுந்தரமூர்த்தி. எம். ஏ. முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

௮. முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்., பிஎச்.டி. மயிலாடுதுறை.

௯. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன், திருநகர், மதுரை-6.

௧௦. பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம், தமிழியலபுலம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

நிறுவனர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

---

## ‘செந்தமிழ்ச் செல்வி’ உறுப்பினர்கட்கு

இவ்வாண்டு ஆடித்திங்களோடு செந்தமிழ்ச் செல்வியின் 57 ஆவது சிலம்பு முடிவுற்று. அடுத்து வருர் ஆவணித் திங்களிலிருந்து 58 ஆவது சிலம்பு தொடர்கிறது. அன்பர்கள் தொடர்ந்து உறுப்பினராகி ஆதரவு நல்கு முகத்தான் அடுத்த ஆண்டுக்குரிய கையொப்பத் தொகையினை (ரூ. 16!-) உடனடியாக அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். இன்றேல் அடுத்த இதழினை விலைபெறு அஞ்சலில் (V. .P.) அனுப்பவேண்டியிருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

—ஆசிரியர்

---

### “ செந்தமிழ்ச் செல்வி ”

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ 300 00

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருஎ | திருவள்ளுவர் ஆண்டு உ0கச, ஆடி<br>ஆகஸ்ட் 1983 | பரல் கஉ |
|---|---|---|


## "அரக்கரில் அரக்கரில் அரக்கர்"

அரக்குதல் என்பது அமுக்குதல், அரைத்தல், அழித்தல், இடம்விட்டுப் பெயர்த்தல், ஒடித்தல், குறைத்தல், தேய்த்தல், முழுவதும் உண்ணல், வருத்துதல், வெட்டுதல் முதலிய பல பொருள்தரும் ஒருசொல். இரக்கம் என்னும் ஒரு பொருளில்லாமல் அழிக்கும் கொடியரை அரக்கர் என்பது வழக்கு. இப்பொழுது கண்காணும் வன்கொடும் அரக்கரென உலகம் சுட்டிச் சொல்லும் அளவுக்குச் சிங்கள வெறியர் அமைந்துள்ளனர்.

ஈழம் என்பதற்குப் பொன் என்பது பொருள். ஈழத்தைப் பொன் கொழிக்கச் செய்யும் புகழ்த் தொண்டராகத் திகழ்ந்து வருபவர் தமிழர். அத்தமிழர்க்குச் சிறுமதிச் சிங்களர் செய்து வரும் கைம்மாறு என்ன? தமிழர்தம் செங்குருதியைச் சேருக்கி வெறிப்பயிரை நட்டுக் கொலை விளைவுகண்டு கும்மாளமிடுகின்றனர்; புதுப்பொங்கலிட்டுப் பூரிக்கின்றனர்.

ஆட்டுத்தொட்டிகளில் ஆட்டை வெட்டிக் குவிப்பதுபோலத் தமிழ்மக்களைத் தேடித்தேடி வெறிகொண்டு தாக்குகின்றனர்; கொன்று குவிக்கின்றனர்; வீதியில் வருவாரைமட்டுமின்றி வீட்டுள் ஒடுங்கியிருப்பாரையும் வெட்டிக் குவிக்கின்றனர். சுற்றுலாச் சென்ற இந்தியத் தமிழரையும் விட்டுவைக்கவில்லை என்றால் ஈழத்தமிழரை விட்டுவைப்பரோ?

"நாலுபேரை நான் தீர்த்தேன்" என்று நாணமல் சொல்லும் சிங்கள வெறியன்; "தமிழினமே ஒழிந்தது" என்று தருக்கும் வெறிகொண்ட சிங்களப்படைஞன்; கட்டு, காவல், சட்டம், முறைமை எல்லாவற்றையும் கட்டவிழ்த்து விட்டுவிட்டுத் தமிழர் அழிக்கப்பெறுவதை வேடிக்கைபார்க்கும் சிங்கள இனவெறி அரசு - எல்லாம் கூடிய கூட்டுமொத்தக் கொடுமையில் தமிழினம் உய்யுமா?

இரக்கமிலா இழிதொழில் கொலைஞர் அரக்கர் என்ருல், ஊர் காவற்கமைந்த சிங்களக் காவல்துறையினரும், நாடுகாவலுக்கு அமைந்த சிங்களப்படைத் துறையினரும் கொக்கு குருவிகளைச் சுடுவதுபோலத் தமிழரைக் கும்பல் கும்பலாய்க் கூட்டம் கூட்டமாய்க் கொன்று குவிக்கும் கொடுமையை என்னென்போம்! அவர்கள் அரக்கரில் அரக்கர் அல்லரோ!

அரசு என்பதொன்று நடைபெறும் நாடு என்ருல் சிறைக் காவலுள் வைக்கப்பெற்றுள்ள தமிழரைச் சிறைக்காவலுள் உள்ள சிங்களவெறியர்கள் நூற்றுக்கணக்கில் கொன்று குவிப்பரோ? அப்படிக் கொன்று குவிக்கப்பட்டவரையும் கேள்வி, முறை, ஆய்வு எதுவும் இல்லாமல் அப்படியே கொளுத்திவிட அரசு துணியுமோ? துணிந்தால் என்ன பொருள்? "தமிழரை எல்லாம் முழுதுற ஒழித்துக்கட்ட உரிமம் வழங்கிவிட்டோம்; உங்களுக்கு வேண்டும் உதவிகள் அனைத்தும் செய்வோம்; உங்கள் வல்லாண்மைக்குத் தக்கவகையில் பரிசும் பாராட்டும் வழங்குவோம்" என்ற நிலைமைக்குச் சிங்கள அரசு போய்விட்டது என்பதுதானே பொருள்? இவ் வெறியரசினரை என்னென்போம்! என்னென்போம்! அரக்கரில் அரக்கரில் அரக்கர் இவரே என்போம்! ஏன்? வெறிகொண்ட நாயைச் சுடுவதற்குப்பதில், அந்நாயையே வெருட்டி வெருட்டி ஏவிவிட்டுக் குதறவிடுபவரை வேறு எவ்வாறு சொல்லமுடியும்?

தமிழர்மேல் சிங்களர் கட்டவிழ்த்துத் தாக்கவிடப் பெற்றதேன்? படைவீரரைத், தனிநாடு கோரும் தமிழர் தாக்கி அழித்தனராம்! தமிழர் சிங்களப் படைவீரரைத் தாக்கிக் கொல்லும் நிலைமை எப்படி ஏற்பட்டது? தனிநாடு வேண்டும் என்னும் எண்ணம் தமிழருக்கு ஏன் ஏற்பட்டது? முறையமைந்த அரசானல் இவற்றையல்லவோ முதற்கண் எண்ணிப் பார்த்திருக்க வேண்டும்?

தம்முயிரைத் 'தேனே பாலே' என்று கருதும் எவரும் படைஞரைத் தாக்க முற்படுவரோ? சாவுக்குத் துணிந்துவிட்டவர்

அல்லரோ அத்துணிவில் ஈடுபடுவர்? ஏன், அச் சாக்காட்டுத் துணிவு ஏற்பட்டது? நொடி நொடியும் சாவும் சாவில், அடியோடு சாவது நற்சாவு என்னும் வீறுவந்துவிட்ட சான்று அல்லவோ படைஞர் கொலை! வெறிகொண்ட அரசும், படையும், காவலும், பொதுமக்களும் ஒன்றுசேர்ந்து வெருட்டி வெருட்டியடித்துக் கொண்டிருந்தால், எத்தனை எத்தனை காலம் தாங்கிக்கொண் டிருப்பர்? 'செய் அல்லது சா' என்னும் முடிவுக்கு வந்ததால் அல்லவோ, அந்நிலைமை ஏற்பட்டது! யானையை எதிரிட்டுத் தாக்கிய உறையூர்க் கோழியும், வெருட்டிய நாயை வீறுகொண் டெதிர்த்த பாஞ்சை முயலும் சொல்லும் செய்திகளே, ஈழத்தமிழர், சிங்களப் படைஞரைத் தாக்கியதாம்.

தமிழர் வந்தேறிகளாம்! வந்தேறிகள் எவர்? ஆங்கிலவர் ஆட்சிக் காலத்தில் தோட்டத்தொழில் புரிவதற்கு வந்தவர்தாம் மூந்தை ஈழத்தமிழரோ? கண்காணியர் துணையுடன் கள்ளத் தோணி வழியே இறக்குமதி செய்யப்பெற்ற ஏழைத் தமிழர்தாம் ஈழத்தமிழரோ? சிங்களவர் ஈழத்துக்கு வருமுன்னே, மண்ணின் மைந்தராய் இருந்தகுடி தமிழ்க்குடி! 'கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்தகுடி' எனப்பெறும் தமிழ்க்குடி! இடைக்காலத்தே, ஈழத்துப் புகுந்தவர் சிங்களர்! ஆப்பிரிக்கநாட்டு இனவெறி அரசுபோலத், தொல்பழந் தமிழ்க் குடியை ஒடுக்கிச் சிறுபான்மையராக்கிச் சிங்களரைப் பெருக்கி வல்லாட்சிபுரிகிறது சிங்கள அரசு.

இற்றைக் குமரிக்குத் தென்பால் இருந்தது குமரிக் கண்டம். குமரிக் கண்டத்தில் ஏழ்தெங்கு, ஏழ்மதுரை, ஏழ்முன்பாலை, ஏழ் பின்பாலை, ஏழ்குன்றம், ஏழ்குணகாரை, ஏழ்பனை என்னும் ஏழேழு நாடுகள் இருந்தன. அவற்றின் பெரும்பகுதி அழிந்து எஞ்சிய சிறு பகுதி பழம்பெயரால் ஏழெழு நாடு என்று வழங்கப்பெற்றது. 'ஏழெழு நாடு' என்பதே 'ஈழநாடு' எனச் சங்கத்தார் காலத்திலேயே வழங்கலாயிற்று. ஏழெழுநாட்டில் இருந்த 'ஏழ் பனை நாடு' என்பதே 'யாழ்ப்பாணநாடென' மருவிற்று. வரலாற்றுச் செய்தி ஈதாக வந்தேறிப் பட்டம் தமிழர்க்கு வழங்கி முன்னவர் பின்னவ ராகவும், பின்னவர் முன்னவராகவும் கதை விரித்து விட்டனர்! அறிவறியாத் தமிழரும் வந்தேறி உணர்வோடும் இருக்கவும் ஆயினர்! எவர் வந்தேறி? ''வந்தவள் வலுத்தாள்; இருந்தவள் கெட்டாள்;'' என்னும் பழமொழியே பதில்மொழி!

சங்கச் சான்றோருள் ஒருவர் ஈழத்துப் பூதன் தேவனர் என்பார். அவர் ஈழத்தில் இருந்து மதுரைக்குப் போந்து சங்கப் புலவரோடு புலவராகத் திகழ்ந்தவர். அவர் பாடியவை நற்றிணை, குறுந்தொகை

அகநானூறு என்னும் முத்தொகை நூல்களிலும் உண்டு. ஈழந் தேவனர் என்னும் ஈழப் புலவர் ஒருவர் பாடிய பாடல் நற்றிணையில் உண்டு! இம்மட்டோ? 'ஈழத்துணவைப்' பட்டினப்பாலை பேசும்! கொல்லம் கொண்டான், கங்கை கொண்டான், கடாரம் கொண்டான் என்பவைபோல ஈழந் திரைகொண்டான் என்னும் ஊர் இன்றும் தமிழகத்தில் உண்டு!

ஈழக்குலச் சான்றோர் பெருமையைச் சேக்கிழார் உரைத்ததுண்டு! ஈழத்துத் தொல்தமிழ்க் குடியினர் ஈழவராய்—ஈழவராய்—இல்லத்துப்பிள்ளைமாராய்த் தமிழகத்தும் கேரளத்தும் மிகவுளர். ஈழப் படையெடுப்புகளைச் சோழர் வரலாறும், பாண்டியர் வரலாறும் பக்கம் பக்கமாக விரித்தல் உண்டு. இவ்வளவு இருந்தும் தமிழர் வந்தேறிகள் என்பது, பேரனைப் பாட்டனுக்கும் பூட்டனுக்கும் ஓட்டனுக்கும் முன்னவனுக்கும் முழுவலக்காரமே யல்லாமல் வேறென் றில்லையாம்; நிற்க.

இனவெறி எரிநெருப்பாகக் கிளர்ந்துள்ளபோதில் தமிழக அரசு எத்துணை முனைப்புக் காட்டவேண்டும்! தமிழகத்தை உள்ளடக்கிக் கொண்டு ஒருமைப்பாட்டில் திளைக்கும் மைய அரசு எத்தகைய எதிர நடவடிக்கை உடனே எடுத்திருக்கவேண்டும்! 'உள்நாட்டுச் சிக்கல்' என ஒழிந்தால் ஓரினமே முற்றாக ஒழிக்கப் படுதற்கு ஒருமித்து முடிவு செய்துவிட்டதாக அமையுமே அல்லாமல் வேறு என்னவாக இருக்கமுடியும்?

தமிழ் நாட்டு அரசு, மைய அரசை நெருக்கவேண்டுமே! இலங்கை அரசை 'எச்சரிக்க'வேண்டுமே! மைய அரசு, தன்னாட்டு மக்களை முற்றாக ஒழிக்கத் துணிந்த அரசை, உலகோர் அவையில் நிறுத்தி உடனே முடிவு காணவேண்டுமே! ஒன்றும் முடியாவிட்டால் படைகொண்டும் தடையுறுத்தவேண்டும் என்பதைச் சூளாகக் கொள்ளவேண்டுமே!

தமிழ் நாடு தனிநாடாக இருந்தால், ஈழத்தமிழர் இத்தகு இன்னலுக்கு ஆட்படுவரோ? ஆட்படத் தமிழர்தாம் விடுவரோ? ஈழத்தில் வடநாட்டவர் இருந்து அவர்க்கு இந்நிலை ஏற்பட்டால் மைய அரசும் அமைதி காக்குமோ? வங்கப் போருக்கு வரிந்து கட்டிக்கொண்டு போய் உதவிய 'மனித இரக்கம்' ஈழப்பக்கம் தலை காட்டாததென்ன? படைகொண்டுகூட இந்தியைத் திணிப்போம் என்ற மொழிவெறிக் கோவிந்ததாசர் கூட்டம் சிங்களவெறியர்க்கு இடையே வடநாட்டார் சிக்கித் தவிப்பராயின் மைய அரசை வாளா விட்டுவைக்குமோ?

தமிழ் நாட்டுத் தாள்கள் பக்கம் பக்கமாக எழுதுகின்றன; தமிழ்நாட்டார் வெம்பி வெதும்புகின்றனர்; பள்ளிகள் கல்லூரிகள்

ஊர்வலம் வருகின்றன; கட்சிகள் கவலை தெரிவிக்கின்றன; தொழிலாளர்கள் துடிக்கின்றனர். தமிழக அரசியலாளர்கள் கூடுகின்றனர்; தீர்மானம் போடுகின்றனர்; ஆனால் இந்திய நாட்டின் முழுத்த எதிர்ப்புக் கிளர்ந்துள்ளதா? ‘மேலும் இக் கெடுபிடி நடந்தால் இந்தியநாடு வாளா இராது’ என அறை கூவியதுண்டா? இல்லையே!

போக்கு வரவு இல்லை; செய்தித் தொடர்பு இல்லை; தமிழருக்கு ஊரடங்குச் சட்டம்; சிங்களவருக்கு வேட்டையாட வாய்ப்பு! அரசும், படையும், காவலும் சிங்கள வெறியருக்குப் பாதுகாப்பு! தமிழர் நிலைமையோ, புலிக்குழாத்து அகப்பட்ட புள்ளிமான் நிலைமை!

இப்பொழுது ஈழத் தமிழருக்கு நம் ‘இரங்கல்’ பயன்படாது! ‘தீர்மானம்’ பயன்படாது! உடனடிப் பாதுகாப்பு வேண்டும்! பாதுகாப்புத் தாராத பரிவு பரிவன்று! அது “பஃதகப் பாதகப் பாதகம்” ஆகும்! அல்லது ஓலமிட்டுச் சாவார்க்கு உதவாத அரக்கரில் அரக்கரில் அரக்கரில் அரக்கர் நாமாவோம்!

—புலவர் இரா. இளங்குமரன்

---

## நன்னிலையைக் காண்பதெந்நாள்?

தென்னிலங்கைச் சீமையிலே செந்தமிழர் மடிகின்றார்
என் செய்வதென்றே இங்கிருந்து நாமும்
ஏதுமறியாது ஏங்கித் தவிக்கின்றோம்
நன்னிலையைக் காணா நாடெங்கும் நல்லவர்கள்
நாளும் முழங்குகின்றார்; நாதியில்லை கேட்பதற்கு.
இந்நிலையே நீடித்தால் என்னமோ எதிர்காலம்?
என்றெண்ணி ஏங்குகின்றார் பன்னாட்டுத் தமிழரெலாம்.
யாதும் ஊரென்றும யாவரும் கேளிரென்றும்
நானிலத்தி லுள்ளோர்க்கு நாமுரைக்கும் வேளையிலே
பாரில் நமக்குதவும் பக்குவத்தைப் பெற்றாரைப்
பார்க்கத் துடிக்கின்றோம் பயனின்றி வாடுகின்றோம்.
சீறுகின்ற சிங்களத்தால் செந்தமிழர் படுந்துயரை
நேர்நின்று பார்த்தவர்கள் நிலைவிழந்து நிற்கின்றார்.
ஏனென்று கேட்பதற்கு நாள்கடத்தும் மக்களையே
நாளும் நாம் காண்கின்றோம்; நாளைவில்லை என்னமோ?
நல்லோரே கூடுங்கள்; நம்குரலை எழுப்பிடுவோம்.
நாடுகளும் ஏடுகளும் நம்துயரை உரைக்கட்டும்
நாம் இங்கே அழுவதன்றி நன்னிலையைக் காண்பதெந்நாள்?

—த.சி.வே.

# சங்க நூல்களில் பைஞ்சாய்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

சங்க நூல்களில் ஒருவகைப் புல் நெய்தல் திணையில் கூறப் பட்டுள்ளது. இப் புல்லை, சாய் என்றும் பைஞ்சாய் என்றும் அழைத்துள்ளனர். இது ஒருவகைக் கோரைப்புல் ஆகும்.

"நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து
யாணர்த் தண்பணை யுறுமெனக் கானல்" —அகநானூறு-220.

"இடைவில நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறப் பரிப்பக் கழனி" —அகநானூறு - 236.

"கடுந்தேரொடுநீ சேறி யாயின்வண்
சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மில்" —நற்றிணை - 60.

"இருஞ்சா யன்ன செருந்தியொடு வேழம்
கரும்பி னலமருங் கழனி யூரன்" —ஐங்குறுநூறு - 18.

"சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
ஈப்பறக்க நொந்தேனும் யானே" —நாலடியார் - 389.

"கரி லூரனை நீதர வந்த
பைஞ்சாய்க் கோதை மகளிர்க்
கஞ்சுவ லம்ம வம்முறை வரினே" —ஐங்குறுநூறு - 54-5.

"பைஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்
றண்புன லாடித்தன் னலமேம் பட்டனள்"
—ஐங்குறுநூறு - 76 - 1.

நெய்தலிலும், கடற்கரைக் கானத்திலும், பௌவ நீரிலும், நீர்த் துறையிலும், தண்பணையிலும் சாய்ப்புல் இருந்தது கூறப்பட் டுள்ளது. கடற்கரையை யொட்டிய கழனிகளிலும், நீர் திகழும் வயலிலும் சாய்க்கோரையைப் பறிப்பது கூறப்பட்டுள்ளது.

"செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றாய் என்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந்த னைத்தற்கோ"
—கலித்தொகை - 76.

"சாய்நாட் பிள்ளை தந்து கொடுத்தும்" —கல்லாடம் - 9 ; 24.

"ஓதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே"
—ஐங்குறுநூறு - 155 - 5.

"மள்ள ருள்ள மகிழ்கூர் தன்றே
பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கும்
அஞ்சாய்க்கூந்த லாய்வது கண்டே" —ஐங்குறுநூறு - 383 - 5.

இந்தக் கோரைப் புல்லிலிருந்து ஒருவகை விளையாட்டுப் பொம்மைகளை மகளிர் செய்தனர். சாய்க்கோரையினுல் செய்த பாவையைப் பெற்ற பிள்ளையென்று தலைவனிடம் தலைவி கூறியதையும் கவனிக்க வேண்டும். களவு நெறியில் ஈடுபட்ட தலைவன் கற்பு நெறியைக் கடைப்பிடித்து, தனக்கு ஒரு பிள்ளையைப்பெற்றுத் தராமல் சாய்க்கோரைப் பிள்ளையையே தந்தான் என்று கூறுவது தெரிகின்றது. இக்காலத்தில் சாய்க்கோரையால் பாவை செய்வது காணப்படவில்லை. ஆனுல் இத்தகைய கோரைப்பாவையைப் பீகாரில் மைதிலி பிராமணப் பெண்கள் இன்றும் செய்து வருகின்றனர். சாய்க்கோரையையும் நெய்தலையும் உழுகின்ற வயலில் களையாகக் கருதினதால் அவ்வாறு கருதாது பாதுகாக்க வேண்டும் என்று தலைவனிடம் தலைவி கூறினதாக நற்றிணைப்பாடல் (60) கூறியுள்ளது. சாய்க்கோரையைப் பறித்து விடுவதால் நன்கு விளங்கித் தெரிகின்ற வயலைப் பற்றி நாலடியார் (385) கூறியுள்ளது.

"கவைத்தா ளலவ னளற்ற சிதையப்
பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
காரேறு பொருத கண்ணகன் செறுவின்
உழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்
முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்
களைநர் தந்த கடைக்கா லெய்தற்
கட்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கான் மாமலர் கொய்துகொண் டவண
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டி"
—பெரும்பாணாற்றுப்படை - 209 - 217.

"அயத்தவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
கைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வா
யாகத் தரும்பிய முலையள் பணைத்தோள்" —அகம் - 62 - 1

"குறுந்தொடி மகளிர் குரூஉப்புனல் முனையிற்
பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குருகு ஓப்பும்"
—அகம் - 226 - 5.

பைஞ்சாய்க் கோரையைப் பல்லில் வைத்து மென்று கிழித்து முடித்த நாரினுல் மாலை கட்டினர் என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. பசுமையான கோரையைத் தனது கூரிய கொம்புகளால் குத்தி எடுத்த காளைமாட்டைப்பற்றியும் பெரும்பாணாற்றுப்படையில் சொல்லப்பட்டுள்ளது. பைஞ்சாய்க்கோரை

நெய்தலொடும், செருந்தியொடும், முள்ளியொடும் இயற்கையில் கடற்கரையோர நிலத்தில் கூறப்பட்டதையும் காணலாம். கழனிகளிலிருக்கும் பைஞ்சாய்க் கோரையைக் களை எடுத்துவிட்டுப் பயிரிடுவதுமுண்டு. பைஞ்சாய்க் கோரைக்குப் பெரிய கிழங்கு போன்ற வேரும் உண்டு.

பழைய உரையாசிரியர் பைஞ்சாய்க்கோரையை, தண்டான் கோரையென்று அழைப்பர். தண்டான் கோரையைக் கிழித்துச் செய்த பாவை என்றும் உரை கூறப்பட்டுள்ளது. ஐங்குறுநூற்றுப் பாடலுக்கு (18) டாக்டர் உ. வே. சாமிநாதையர் எழுதிய குறிப்புரையில், "சாய்பஞ்சாலிக்கோரை, மர விசேடமுமாம்; இது செருந்திக்கு உவமை. செருந்தி—ஒருவகைக் கோரை; இது நெட்டிக்கோரையென்றும், வாட்கோரையென்றும், தண்டான் கோரையென்றும் பழைய உரைகளில் வழங்கப்படுகிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார். செருந்தி ஒருவகைக் கோரைப்புல் அன்று. செருந்தி ஒரு மரமாகும்.

சாய் என்ற பெயர் கோரைப்புல் காற்றில் சாய்வதால் வந்திருக்கலாம். சென்னைப் பல்கலைக்கழக அகராதி, 'சாரம்' என்ற சொல்லிலிருந்து சாய் என்பது தோன்றிற்று என்று கூறியுள்ளது பொருத்தமற்றது. 'புலவுப் புலி புரண்ட புல்சாய் சிறு நெறி' என்று அகநானூறு (357) கூறுவதை இதன் சார்பாகக் கவனிக்க வேண்டும். புலி புரண்டதால் காட்டுப்புல் சாய்வதாகக் கூறப்பட்டுள்ளது. சங்ககாலத்தில் புகார் நகரை ஒட்டிச் சாய்ப்புல் நிறைந்திருந்த காடு இருந்தது. அதனுல் சாய்க்காடு, சாய்க்கானம் என்று அழைக்கப்பட்டது. இப்போதும் அந்த ஊர் உள்ளது. பசுமை+சாய்=பைஞ்சாய். பசுமையான புல்லானதால் 'பைஞ்சாய்' என்று அழைக்கப்பட்டது. கோரைப் புல்லிற்கு Sedge என்ற பெயர் ஆங்கிலத்திலும் வழங்கியுள்ளது. பைஞ்சாயின் அறிவியற் பெயர் Cypress pangorai என்பதாகும். இப் பெயரில் இரண்டாவது சொல் 'பைங்கோரை' என்ற தமிழ்ச் சொல்லாக இருக்கலாம். மற்றும் இதையே Cypress tegutem என்றும் அழைப்பர்.

———

## செல்வத்துப் பயன்

பெருஞ் செல்வத்தின் ஒரே பயன், அதனைப் பகுத்துப் பயன்படுத்துவதே. மற்றவையெல்லாம் வீணாரவார மட்டுமே

—பேக்கன்

'செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேமெனினே தப்புந பலவே' —புறநானூறு 189

# தொல்காப்பியச் சிந்தனை*

[செஞ்சொற்கொண்டல், தமிழாகரர்
டாக்டர் சொ. சிங்காரவேலன் எம்.ஏ.,பிஎச்.டி.]
[தமிழ்ப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மயிலாடுதுறை.]

"முதலில் அவன் பேசினான்; அவள் கேட்டுக்கொண்டிருந்தாள். பிறகு அவள் பேசினாள்; அவன் கேட்டுக்கொண்டிருந்தான். பிறகு அவர்கள் பேசிக்கொண்டார்கள்; அதை ஊரார் கேட்கலானார்கள்" என்று தமிழ்ப்பத்திரிகை ஒன்றில் வெளியான துணுக்கு எல்லோரும் அறிந்தது. இதன் அடிப்படை என்ன? இந்த இனிய காலைப் பொழுதிலே.—கணவன் மனைவி இருவரிடையே இருக்க வேண்டிய—இன்றியமையாது இருக்க வேண்டிய பண்பு ஒன்றையல்லவா இந்தத் துணுக்குக் கோடிட்டுக் காட்டுகிறது!

கணவன் மனைவி இருவரும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளுதலும், ஆழ்ந்த அன்பிலே சிறிதும் வேறுபாடு வராமல் ஒற்றுமைபபட்டு வாழ்தலும் இல்வாழ்க்கையின் வெற்றிக்கு அடிப்படைத் தேவைகள்.

"இவர் எடுத்ததற்கெல்லாம் என்னிடம் குறை காணுகிறார்" என்று மனைவி குறைபட்டுக் கொள்வதோ, "இவளுக்கு நான் என்றாலே ஓரளவு இளப்பம்தான்" என்று குடும்பத்தலைவன் குறைபட்டுக் கொள்வதோ ஓர் ஆரோக்கியமான குடும்பத்திற்கு அழகுகள் அல்ல பின் எது குடும்பத்திற்கு அழகு ஊட்டும் அடிப்படைப் பண்பு! இந்த அடிப்படைப் பண்புகளைத் தொல்காப்பியர் சிந்திக்கின்றார். அச்சான்றோரது சிந்தனை ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்குப்பின் இன்றும் புதுமை மணம் வீசி நிற்கின்றது, ஆம்; தொல்காப்பியப் புதுமை-தமிழ்மக்கள் சிந்தனைப் புதுமை என்று கூறுவது தவறாகாது!

கணவன், மனைவி இருவரது கற்பு ஒழுக்கத்தைத் திருமணத்திற்குப் பின் அவர்கள் வாழ்வியற் பண்புகளைக் கூர்ந்து நோக்கித் தொல்காப்பியர் வெளியிடும் கருத்துகள் தொல்காப்பியப் பொருளதிகாரக் கற்பியலில் விளங்குகின்றன. கணவன் மனைவி இருவருக்கும் இடையே உள்ள அன்பு எப்போதும் குறைதலாகாது: முதல் நாளில் தோன்றிய அந்தக்

---

* 7—1—83 அன்று திருச்சிராப்பள்ளி, அனைத்திந்திய வானொலியில் ஆற்றிய உரை.

காதல் அன்பு, நாட்பட நாட்பட வளர்ந்துகொண்டே போக வேண்டும்—வளர் பிறையாக! அந்த அன்பு இளமைக்காலத்தில் இருந்து, முதுமைக் காலத்தில் தேய்ந்து விடலாகாது—தேய் பிறையாக! இந்த அன்பைக் 'காதல்' என்ற சொல்லாலும், 'காமம்' என்ற சொல்லாலும் தொல்காப்பியர் குறிக்கின்றார். ஆம்; காதல் உயர்ந்த பொருளைக் குறிக்கும் நிலையிலும், 'காமம்' இழிந்த பொருளைக் குறிக்கும் நிலையிலும் பிற்காலத்தே பொருள் மாறலா யிற்றே தவிர, பழங்காலத்தில் இரண்டு சொற்களும் உயர்ந்த சொற்கள்தாம்!

தலைவியின் பண்புகளைத் தொடுக்கின்ற போது இந்த அன்பைக் 'காமம்' என்றே குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர். கற்பு—திண்ணியதாதல் வேண்டும். கல்லைப் போன்றது கற்பு எனலாம்; 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற உயர்ந்த கோட்பாட்டில் திண்மையாக—உறுதியாக இருத்தலே 'கற்பு.' இனி, தீய துறையிலே நெஞ்சத்தை ஓடவிடாமல் இழுத்துப் பிடித்து நிறுத்தும் மனத்தின் திறம் இருக்கிறதே, அதுதான் 'நிறை' எனப்படுவது; ஆம் நிறுத்துவதால் அது நிறை எனப்பட்டது.

'சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை''

என்று பொதுமறைப்புலவன், இந்த நிறைகாக்கும் காவலைத் தலைமையாகக் குறிப்பது அனைவரும் அறிந்ததே அன்றோ ?

நல்ல பகுதிகளை உடைய ஒழுக்கம் தலைவியின் பண்புகளில் பிறிதொன்று என்கின்றார் தொல்காப்பியர். இனிய வார்த்தை களைப் பேசுதல், உண்மை கடைப்பிடித்தல், செய்ந்நன்றி மறவாமை முதலியவற்றையே 'நற்பால் ஒழுக்கம்' என்றார் என்று கருதலாம்.

பொறுமை பெண்களுக்கு இருக்க வேண்டிய தலையாய பண்பு.

''என்ன சமையல் முடிந்துவிட்டதா?'' என்று கேட்பான் கணவன்.

''ஆமாம்; சமையலை முடித்துவிட்டுச் சங்கீதமா பாடிக் கொண்டிருக்கிறேன்?'' என்று பதிலுக்கு, விடை தராமல் வேலைப் பாய்ச்சுவாள் மனைவி.

''நேரமாகி விட்டதே'' என்று கணவன் மெல்லக் கூறுவான்.

“நேரமாகிவிட்டால், சிற்றுண்டிச் சாலைக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டுப் போகலாமே!” என்பாள் துணைவி.

“சிற்றுண்டிச் சாலைக்குப் போய்ச் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கொள்ளவா, உன்னைத் திருமணம் புரிந்துகொண்டேன்?” என்று சீறுவான் கொண்டவன்.

“ஆமாம், திருமணம் செய்து கொண்டதே தவறுதான்; அப்போது என்னிடம் இளமை இருந்தது; அழகு இருந்தது; நான் செய்ததெல்லாம் உங்களுக்குத் தேனாக இனித்தது. இப்போது? நான் கிழடு தட்டிப் போனதால்...” என்று வெடித்துச் சிதறுவாள், கைப் பிடித்தவள்.

இருவரிடமும் இருக்க வேண்டிய பொறுமை, இல்லாமற் போனதால்—உரையாடலும் ஓயாத சலிப்புமாக இத்தகைய காட்சிகளை இன்றைநடைமுறை உலகில் நாம் ஆங்காங்கும் பரவலாகப் பார்க்கின்றோம். ‘மெல்லியல் பொறை’ மெல்லியலார்க்கு உற்ற பண்பு என்கின்றார் தொல்காப்பியர். ‘ஒருவர் பொறை இருவர் நட்பு’ என்கின்றது நாலடி நன்னூல்.

விருந்தினரைப் பேணி உணவு உண்பித்து அன்பு காட்டுவது மகளிர்க்கு உற்ற பண்பு ஆகும்; குடும்பப்பண்பிலே விளக்காகி நிற்கும் ஒரு குடும்பத்தலைவியின் விருந்தோம்பற் பண்பு சரித்திரம் படைக்கும், பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும். அறத்திற்கு விருந்து பேணுதல் அன்றோ அடிப்படை! இளையான் குடிமாறரும், அவர் தம் இல்லாளும் மறக்கவியலா தவிருந்தோம்பல் மாணிக்கங்கள். இவ்வாறே சுற்றத்தாரைத் தழுவிக்கொள்ளும் தூயதிறமும் தலைவிக்கு உற்ற பொறுப்புக்களுள் ஒன்று ஆகும். ‘பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல் சுற்றத்தார்க்கு உற்ற இயல்பு’ அல்லவா?

ஒரு குடும்பத்தலைவிக்கு உள்ள பண்புகளைத் திட்ப நுட்பமாகக் கூர்ந்து நோக்கி இவ்வாறு வகைப்படுத்தும் தொல்காப்பியர் நூற்பா இன்றைய நம் சிந்தனைக்கு உரமாகட்டும்; தாய்மார்கள் நெஞ்சிலே நிறுத்திக்கொள்ள வேண்டிய தொல்காப்பியப் பொன்வரிகள் இவை :

“கற்பும், காமமும், நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும், நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும், சுற்றம் ஓம்பலும்,
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்”
(பொருளதிகாரம்—கற்பியல்—11)

———

# சுந்தரர் செந்தமிழ்

[டாக்டர் சோ. ந. கந்தசாமி, இந்தியத்துறை,
மலாயா பல்கலைக்கழகம், கோலாலம்பூர்]

(முன் இதழ் ௪௮௧ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**மாநுடம் பாடாமை**

திருத்தொண்டர்க்கு அடியேன் எனப் பாடிய சுந்தரர் ஏனைய மனிதர்களைப் பணிந்து பாடாமையும் குறிப்பிடத்தக்கது. சங்க காலத்தில் கலைகளை ஆதரித்த வள்ளல்கள் திகழ்ந்தனர். இடைக்காலத்தில் கொடைக்குணம் கொண்டோர் குறுகினர். ஆதலின், மானிடப்பாடாண் மாறித் தெய்வப்பாடாண் வளர்ந்தது. இல்லாத பண்புகளையும் சிறப்புகளையும் இருப்பதாகப் பாடினும் கொடுக்கும் வள்ளல் ஒருவரும் இல்லை. திருப்புகலூரில் மேவிய பெருமானைப் புலவர்களே பாடுங்கள்! இம்மை மறுமை இரண்டற்கும் பயன்படும் என்ற கருத்தில் திருப்புகலூர் பதிகத்தினைப் பாடியுள்ளார். பங்குனி உத்திரத் திருநாளில் செய்யும் தானதருமங்களுக்குப் பொருள்வேண்டி இப்பதிகத்தினைச் சுந்தரர் பாடித் தொழுது பின்னர் செங்கற்களைத் தலைக்கு உயரமாகவைத்துத் துயின்றெழுந்தபொழுது, அவை அனைத்தும் பொற்கட்டிகளாக இருத்தலைக்கண்டு சிவனருளை வியந்து பாடியதாகக் காண்கிறோம். இப்பதிகத்தில்,

"மிடுக்கி லாதானை வீமனே விறல்
விசயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப் பாரிலை
பொடிக்கொள் மேனிஎம் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்கள்!
அடுக்குமேல் அமருலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே"

எனவரும் பாடல் நோக்கத்தக்கது. ஆற்றலுக்கு வீமனையும் வில்வித்தைக்கு அர்ச்சுனனையும் கூறிய சுந்தரர், கொடைக்குக் கர்ணனைக் கூறாது பாரியைக் கூறியிருத்தல் சிந்திக்கத்தக்கது. அஃறிணை இனத்தைச் சேர்ந்த முல்லைக்கொடி படர்வதற்குக் கொம்பின்றி வாடுவதைக்கண்டு தன் சீரிய தேரினை அதற்குப் பற்றுக்கோடாக வழங்கிய கொடைத்திறனைப் புறநானூறு முதலிய சங்கநூல் பயிற்சியினால் அறிந்து சுந்தரர் பாடியிருத்தல் எண்ணி இன்புறத்தக்கது. நம்மாழ்வார்கூட,

"என்னவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்!
மன்னு மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்"

என்று இசைத்தலால், பக்தி இயக்கம் பரவிய இடைக்காலத்தில் புலவர்கள் இடத்தில் நிலவிய மனப்பான்மை புலனாகிறது. பின்னர்வந்த அருணகிரிநாதர் கூட,

"வஞ்சக லோபமூடர் தம்பொருள் ஊர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி என்றிசை வாது கூறி
வந்தியர் போல வீணில் அழியாதே
செஞ்சரண் நாதகீத கிண்கிணி நீபமாலை
திண்திறல் வேல்மயூரம் முகம் ஆறும்
செந்தமிழ் நாளும் ஓதி உய்ந்திட ஞானம் ஊறும்
செங்கனி வாயில் ஓர்சொல் அருள்வாயே"

என்று இசைத்தல் இவண் ஒப்பிட்டு எண்ணத்தக்கது. மனிதர்களைப் புனைந்து பாடிய காலம் மாறி இறைவனையே பாடும் இலக்கிய மரபினை இவ்வருளாளர் பாடல்களில் இலங்கக் காண்கிறோம்.

## புறச்சமய கண்டனம்

சுந்தரர் காலத்தில் சமண பௌத்தங்களாகிய புறச்சமயங்கள் ஓரளவு இருக்கத்தான் செய்தன. பரசமயகோளரியாகிய சம்பந்தர் இவ்விரு சமயத் தலைவர்களையும் சொற்போரிட்டு வாகை சூடினும் முற்றிலும் அவை அழிந்துவிடவில்லை. பௌத்தத்தை விட சமணக் குறிப்புகள் சுந்தரர் தேவாரத்தில் கொஞ்சம் கூடுதலாகவே காணப்படுகின்றன. அன்புநெறியைப் போதிக்க வந்த அருகசமயத்தவர் தம்நெறிக்குரிய உயரிய கொள்கைகளை எண்ணாது அரசியல் செல்வாக்கினைக் கருவியாகக்கொண்டு சிவநிந்தை புரிவதில் ஈடுபட்டனர். இக்கொடுஞ்செயலை இடித்துரைக்கும் வகையில் சுந்தரர்,

"நமண நந்தியும் கருமவீரனும்
தருமசேனனும் என்றிவர்
குமண மாமலைக் குன்று போல்நின்று
தங்கள் கூறையொன் றின்றியே
ஞமண ஞாஞண ஞாணஞோணமென்
றோதியாரையும் நாணிலா
அமணராற் பழிப் புடையரோ நமக்கு
அடிகளாகிய அடிகளே"

என்று இகழ்ந்துரைத்தல் எண்ணத்தக்கது. சமணர்களில் நந்திகணம், வீரகணம், சேனகணம் என்னும் பிரிவுகள் நாடெங்கிலும் விளங்கின என்பது இலக்கியச் சான்றுகளால் மட்டுமன்றி கல்வெட்டுகளாலும் நன்கு அறியப்படும். மேற்சுட்டிய பாடலில் வரும் நமணநந்தி என்ற பெயருடன் சிந்தாமணி ஆசிரியர் சுட்டும் அச்சணந்தி, பவணந்தி, வச்சணந்தி முதலிய பிற்காலச் சமணச் சான்ருேர் பெயர்களும் எண்ணுதற்கு உரியன. சமண தீர்த்தங்கரர் இருபத்து நால்வரில் முதல்வராகிய ஆதிநாதர் இடபதேவர் என்று போற்றப்பெறுகிருர். இவரைப் பின்பற்றியோர் நந்திகணத்தவர் எனப்பெற்றனர். இறுதி தீர்த்தங்கரராகிய மகாவீரரை வழிபட்டவர்கள் வீரகணம் எனப்பட்டனர். சுந்தரர் பாடலில் சுட்டப்பெறும் கருமவீரன் என்ற பெயரும் மகாவீரனைப் போன்றதே. அப்பர்பெருமான் சமணநெறியில் தலைமைபெற்றுத் திகழ்ந்தபொழுது 'தருசேனன்' என்று அழைக்கப்பெற்ருர். அறங்களையே படைக்கலனுகத்தாங்கி வாழ்க்கையில் எதிரிடும் அகப்பகை, புறப்பகைகளை அறவே களைந்தவர்கள் சமணர்களே ஆவர். எனினும் சுந்தரர் காலத்தில் இவர்கள் போலித்துறவுபூண்டு கேலிக்குரிய நிலையினை அடைந்துவிட்டனர்போல் தோன்றுகிறது! உண்ணுநோன்பு மேற்கொள்ளும் இவர்களின் உடம்பு குமணனுக்குரிய முதிரமலைபோல் பருத்து விளங்கியது எனச் சுந்தரர் நகையாடுகிருர்! இலக்கண உரையாசிரியர்கள், 'பகல் உண்ணுன் பருத்திருப்பான்' என்ற தொடரை அருத்தாபத்தி அளவைக்கு எடுத்துக்காட்டி, இரவுண்ணும் வாய்மையினைச் சுட்டுவர். இவ்வழக்கு சமணரின் போலிநோன்புக் கொள்கையை அடியொற்றி வநதிருத்தல்கூடும். மணிமேகலையில் கட்குடியனுக்கு முன்னர் ஒரு திகம்பரச் சமணத் துறவியைப் படைத்துக்காட்டும் சாத்தனுர்கூட,

> "உண்ணு நோன்பின் உயவல் யானையின்
> மண்ணு மேனியன் வருவோன்"

என்று எள்ளுதல் குறிப்பிடத்தக்கது. துவரத்துறந்தவர்க்கு ஆடையும்மிகை என்ற எண்ணத்தினுல் சமணத் திகம்பர நிலை வலியுறுத்தப்பட்டது. ஆயினும் இத்தகைய துறவிகள், இருபாலரும் மக்கள் சமுதாயத்தில் நடமாடுதல் நகைப்பிற்கு இடனுகும் அன்றே! இவர்கள் கூறும் அருகமந்திரங்கள் அர்த்தமாகதி என்னும் பாகதமொழியில் உள்ளவை. பெரும்பாலும் இம்மொழியில் மெல்லொலிச் சொற்கள் மிகுதி. அம்மந்திரத்தைக் கேட்கும் ஆரூரர் மேற்சுட்டிய பாடலின் மூன்ரும் அடியில் அவ் ஒலிக்குறிப்பு தோன்றப் பரிகாசஞ் செய்கிருர். திருநாவுக்கரசரும், 'மூக்கினுல் முரன்று ஓதி" என்று அனுபவத்துடன் சொல்கிருர்.

பல்வகையாலும் பழிப்புக்குரிய அமணர்கள் நம் இறைவனைப் பழிப்பதால் ஒருகுறையும் நேர்வதில்லை என்று சுந்தரர் முடிக்கின்றார். இக் கருத்து,

"சந்துசேனனும் இந்துசேனனும் தருமசேனனும் கருமைசேர்
கந்துசேனனும் கனகசேனனும் முதலதாகிய பெயர்கொளா
மந்திபோல்திரிந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பயன் அறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்திரு ஆலவாய்அரன் நிற்கவே.

கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியும் குமணமா
சுனகநந்தியும் குனகநந்தியும் திவணநந்தியும் மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன்திரு ஆலவாய்அரன் நிற்கவே"

எனவரும் திருஞானசம்பந்தப் பெருமானின் பாடல்களில் எதிரொலிப்பதுபோல் தோன்றுகிறது. இத்தகைய பாடல்களினால் சைவசமயத்தை நிலைநாட்ட நம் முன்னோர்கள் எந்த அளவு முயன்றுள்ளனர் என்ற உண்மையும் புலனாகும்.

**சுந்தரர் வழங்கும் செய்தி**

வாழ்க்கைக்கு உறுதிபயக்கும் அறக்கருத்துகள் பல சுந்தரரின் பதிகங்களில் இடம்பெற்றுள்ளன. ஐம்புல இன்பமும் ஆரத்துய்த்த சுந்தரர் முடிவாக நிலையாமையினைத்தான் கூடுதலாக வலியுறுத்துகிறார். இங்ஙனம் வலியுறுத்துவதன் நோக்கம் நிலையானபொருளை மாந்தர் அடைதல்வேண்டும் என்ற உயர் குறிக்கோளே ஆகும். ஆதி சைவராகப் பிறந்த ஆரூரர் அரசச்சூழலில் வளர்ந்து அருள்வாழ்க்கையினை மேற்கொண்டு பலதிற மக்களையும் பார்த்துப் பழகிப் பெற்ற பட்டறிவாலும் மெய்யுணர்வாலும் நுண்ணிதின் ஆராய்ந்து மக்கள் கடைத்தேற அரியபல அறிவுரைகளை வழங்கியுள்ளார். திருநாட்டியத்தான் குடியில் கோயில்கொண்டுள்ள ஈசனை நோக்கி,

"கலியேன் மானுட வாழ்க்கைஒன் றாகக்
கருதிடிற் கண்கள்நீர் பில்கும்..........
நலியேன் ஒருவரை நான்உனை யல்லால்
நாட்டியத்தான் குடி நம்பீ!"

என்று முறையிடுகிறார். ஆரஅமர ஆராய்ந்து பார்க்கின் வாழ்க்கையின் அவலங்கள் மனக்கசிவினையும் உருக்கத்தையும் உண்டாக்கும். உலகியல் மாயக்காட்சிகளில் மயங்கி இறுதிக் குறிக்கோளினை எண்ணாது வீணாள் கழிப்பதை நினைத்தால் கண்களில் நீர்பெருகும். தன் குறைகளையும் துன்பத்தையும் மற்றவரிடம் சொல்லுதல் இழிபு. ஔவைப்பிராட்டி, "தோழனோடும் ஏழைமை பேசேல்" என்று இத்தமிழ் மரபினை நினைவூட்டுதல் காணலாம்; எனவேதான், நம் குறைகளை

முறையிடுவதற்கு ஒரே இடம் இறைவனின் திருமுன்னிலையே என்பதைச் சுந்தரர் இறுதியடியில் நயமாகச் சொல்லியுள்ளார்.

அரசனுக்கு ஒப்பாக வாழ்ந்த ஆரூரர்க்கு வாழ்க்கையானது மாயமாகவே காட்சிதந்தது. ஏதோ வாய்ப்பும் வசதியும் இன்மையினால் வாழ்க்கையை மாயை என்று இழித்துரைப்பவர்கள் இருக்கலாம். ஆயின், எல்லா வாய்ப்பும் வளமும் நலமும் ஒருசேரப் பெற்ற சுந்தரர் உலக வாழ்வின் வெறுமையினை உற்று நோக்கினர். பொறிகளினால் பெறும் இன்பம் சிறிதுகாலமே நிற்பது; மீண்டும் பொறிஇன்பம் பெறுதற்குத் தூண்டுவதுடன் அங்கும் இங்கும் மாந்தரை அலைக்கழித்துத் துயரிற் செலுத்தும் ஆசையே எவ்வகைத் துன்பத்திற்கும் அடிப்படை என்பதை நன்கு அறிந்தார். நிலைபேறான இன்பத்தை இறையநனினால் கண்டுகொண்ட பின்னர் சுந்தரர் உலகியல் இன்பங்கள் அற்பமானவை என்பதைத் தெளிவுறுத்தி இறையின்பம் நாடுதற்கு வழிப்படுத்தும் வகையில்,

"வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்"

"மத்த யானை ஏறி மன்னர் சூழவருவீர்காள்
செத்தபோதில் ஆரும் இல்லை சிந்தையுள் வைம்மின்கள்"

"தோற்றம் உண்டேல் மரணம் உண்டு துயரமனை வாழ்க்கை"

"கூசனீக்கிக் குற்றம் நீக்கிச் செற்றமனம் நீக்கி
வாச மல்கு குழலினார்கள் வஞ்சமனை வாழ்க்கை
ஆசை நீக்கி அன்பு சேர்த்தி என்பணிந்தேறேறும்
ஈசர் கோயில் எதிர்கொள் பாடி என்பதடைவோமே"

"இன்பம் உண்டேல் துன்பம் உண்டு ஏழைமனை வாழ்க்கை"

"தந்தை யாரும் தவ்வை யாரும் எட்டனைச்சார் வாகார்"

என்று அறிவுறுத்தும் அருங்கருத்துகள் சிந்திக்கத்தக்கவை ஆகும்.

திருநெல்வாயில் அரத்துறைப் பதிகம் முழுதும் திருக்குறள் கூறும் அறங்களை வலியுறுத்தும் பாங்கில் அமைந்திருத்தல் காணலாம். சான்றாக,

"பொறிவாயில்இவ் வைந்தினையும்
அவியப்பொருதுன் அடியேபுகும் சூழல்சொல்லே"

"அற்றார் பிறவிக்கடல் நீந்திஏறி அடியேன்
உய்யப்போவதோர் சூழல் சொல்லே"

"ஓடுபுனற் கரையாம் இளமை
உறங்கிவிழித் தாலொக்கும் இப்பிறவி
வாஅடியிருள் ஏ வருந்தல் செய்யாது
அடியேன் உய்யப்போவதோர் சூழல்சொல்லே"

"அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய்
அடியேன் உய்யப்போவதோர் சூழல்சொல்லே"

எனவரும் பதிகப் பகுதிகளைச் சுட்டுதல் தகும். இப்பதிகத்தின் முதலில்,

"கல்வாய் அகிலும் கதிர்மாமணியும்
கலந்துந்திவரும் நிவவின்கரைமேல்
நெல்வாயில் அரத்துறை நீடுறையும்
நிலவெண்மதி சூடிய நின்மலனே!
நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார்
நரைத்தார் இறந்தார் என்று நானிலத்தில்
சொல்லாய்க்கழி கின்றது அறிந்தடியேன்
தொடர்ந்தேன் உய்யப்போவதோர் சூழல்சொல்லே"

எனவரும் திருப்பாடல் திகழ்கிறது. எழில்தவழும் இயற்கைச் சூழலில் வெள்ளாற்றங்கரையில் திருவரத்துறை என்னும் தலத்தில் வீற்றிருக்கும் இறைவனிடம் முறையிடும் இப்பாடலில் மனித வாழ்க்கையினை ஒருவரியில் ஐந்து சொற்களில் சுருக்க விளக்கமாகச் சுட்டியிருத்தல் நம் சிந்தையினைத்தொடுகிறது. பொதுநிலையில் மக்களின் தோற்றம், பிறத்தல், நடைபயிலுதல், செயல்படுதல், நரைத்துத் திரைத்து மடிந்து முடிந்துவிடுதல் என்ற எளிய நிலையில் ஏனைய உயிரினங்களைப் போலவே அமைந்துவிடுகிறது. இதுவே நடைமுறை வாழ்வாக உலகில் பேசப்படுகிறது. இத்தகைய இழிநிலையில் தன் வாழ்வும் அமைந்துவிடாது உய்தி பெறுவதற்கு உரிய உபாயத்தினை வழங்கிக் கடைத்தேற்றுதல் வேண்டும் என்று ஈசனை வேண்டுகிறார் சுந்தரர். ஒவ்வொரு மனிதனும் இறைவனிடம் பெறுதற்குரிய பெறலரும் பரிசில் இதுவாகவே அமைதல்வேண்டும் என்பது சுந்தரர் உலகினர்க்கு வழங்கும் அருட்செய்தி ஆகும்.

## முடிவுரை

சைவ சமயத்தின் தலைவர்களில் ஒருவராகத் தோன்றித் தோழமைநெறி, யோகநெறிகளில் நின்று, செந்தமிழ்த் திறமும் அகப்பொருள் மரபும் அறிந்து பாடி, அடியார் பெருமைக்கு முதனூல் தந்து, மானுடம் பாடாமையினைக் கொள்கையாகக் கொண்டு, நம் சமயப் பாதுகாப்பின்பொருட்டு சமண பௌத்தங்களை மறுத்து, தம் வாழ்க்கைக் குறிப்புகளைப் பதிகங்களில் பதித்து, உலக வாழ்வில் இருப்பினும் உயர்ந்த தெய்வ நாட்டம் கொண்டு, எண்ணற்ற செயற்கருஞ் செயல்களை இறையருளினால் நிகழ்த்தி, மக்கள் ஈடேறுதற்குரிய வழியையும் காட்டிச் சிவப் பேறின்பம் எய்திய சீலராகத் திகழ்கிறார் சுந்தரர். அவர் அருளிச் செய்துள்ள பதிகங்களின் பொருள் உணர்ந்து, ஓதி உணர்ந்து பின்பற்றி உய்திபெறுதல் ஒவ்வொரு தமிழரின் தலையாய கடமையாகும்.

———

# தமிழ் அரசு இசைக் கல்லூரிகளில் தெலுங்குப் பேராசிரியரா ?

[டாக்டர் வி. ப. கா. சுந்தரம்

*தமிழிசை ஆய்வாளர் பசுமலை, மதுரை*]

அரசு இசைக் கல்லூரி இயக்குநர், தினமணியில், 1983 ஜூலை 5 இல் தமிழ் அரசு இசைக் கல்லூரிகளில் தெலுங்கு விரிவுரையாளரை நியமிக்கப்போவதாக வெளியிட்டுள்ளார். இது இவரது புத்தம் புதிய திட்டம்.

தமிழக அரசும் அரசர் அண்ணாமலைச் செட்டியார் குடும்பத்தினரும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்போன்ற பற்பல கழகங்களும் பல்லாண்டுகள் தெலுங்கிசையின் மேலோங்கிய நிலையை நீக்க முயன்றுள்ளனர். தாழ்த்தி ஒதுக்கப்பட்ட தமிழிசை தழைக்கப் பல்வேறு முயற்சிகள் செய்துவருகிறார்கள். இம் முயற்சிக்கு முரணாகவும் தமிழரசின் கோட்பாடுகட்கு முரணாகவும் தெலுங்கு இசை பரப்புதற்காகத் தெலுங்கு விரிவுரையாளரை அமர்த்த இசைக்கல்லூரி இயக்குநர் புதிய திட்டமொன்றைத் தீட்டியுள்ளனர்; இது முளைத்து எழும்பும் தமிழிசையை முளையிலேயே அழிக்கத் திட்டமிட்டமையாகும்.

சட்டமன்றத்தில் அண்மையில் பேசப்பட்டவை வருமாறு: தமிழிசைத்துறைச் சொறகள் கல்லூரிகளில் இதுகாறும் இடம் பெறவில்லை; அண்ணாமலைப் பல்கலைக்கழகம் முயன்று வெளியிட்டுள்ள தமிழிசைக் கீர்த்தனைகள் பரவவில்லை; தெலுங்கு இசையே பாடத்திட்டத்தில் இருந்துவருகிறது; பாடத்திட்ட அமைப்பில் சீரிய முன்னேற்றங்கள் இல்லை என்று பேசப்பட்டது.

ஆனால் தெலுங்கிசையை வலுப்படுத்தி வளமுறச் செய்ய இசையியக்குநர் பெரிதும் சூழ்ச்சியாக ஆதரவு தந்துவருகிறார். தெலுங்கு விரிவுரையாளரைப் புதிதாக நியமிக்கும் இந்தத் தேவையற்ற முயற்சியைத் தடுத்து நிறுத்தவேண்டும்.

தமிழிசைக் கல்லூரிகளில் பாடத்திட்டத்தில் உள்ள தெலுங்குக் கீர்த்தனைகளை நீக்கித் தமிழ்க் கீர்த்தனைகளை இடம் பெறச் செய்யத்தக்க புதிய பாடத்திட்டக் குழு வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் ஒரு முழு இசையிலக்கண நூல் உண்டு. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திடமும், தஞ்சைப் பல்கலைக் கழகத்திடமும் அது நூலாக இருக்கிறது. சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகையில் உள்ள இசைத்துறைச்

சொற்களையும் இசையிலக்கணங்களையும் கற்பிக்கவேண்டும் என்று அறிவர்கள். ம.பொ.சி., கி.ஆ.பெ.வி., வ.சுப. மாணிக்கனுர்., அண்ணல் கி.பழனியப்பனுர், கீ. இராமலிங்கனுர், வ.சுப்பையாப் பிள்ளை முதலிய தலைசிறந்த சான்ருேர்கள் வற்புறுத்தி யுள்ளனர். இவ்வகையில் முயற்சிகள் மலரவில்லை. தெலுங்குப் பேராசிரியரை நியமிக்கவும் தெலுங்கிசையில்தான் எல்லாம் உண்டு என்று குருட்டுப் பிடிவாதத்தைப் பரப்பவும் முயற்சிகள் மலர்ந்துகொண்டே வருகின்றன. இசைக்கல்லூரி முதல்வர் கட்கும் ஆசிரியர்கட்கும்—தமிழிசைத்துறைச் சொல்லறிவூட்ட மறுபயிற்சி தேவை; தமிழ்க்கீர்த்தனைகட்கு வளமூட்ட மறுபயிற்சி தேவை. சிறப்பாகப் புதுப்பாடத் திட்டம் இசைக்கல்லூரிக்குத் தேவை. தெலுங்குப் பேராசிரியர்கள் தேவையில்லை: அவர்களை நியமிப்பதை அரசு தடுக்கவேண்டும் என வேண்டுகிருேம்.

———

## உலகம் போற்றும்!

[வேலூர் ம. நாராயணன் எம்.ஏ.]

"காலத்தில் மழைபெய்யின் காடு வாழும்:
கனிமரங்கள் காய்த்திருக்கும் கிளைகள் தாழும்:
ஞாலத்தில் நல்லவர்கள் நிமிடந் தோறும்
நற்கடமைத் துறைமூழ்கின் நலங்கள் சேரும்,
மாளாத செல்வந்தான் மதிப்பாம் என்றே
மாசுற்ற நெறிகளிலே செல்வம் சேர்த்தால்
கோலங்கள் தான்மிஞ்சும்; கொள்கை சாகும்
கற்ருேர்கள் சான்ருேர்கள் உள்ளம் வேகும்!

எப்படியோ செல்வத்தைச் சேர்த்த பேர்கள்
எப்படியும் வாழ்ந்திடலா மென்ற போக்கில்
தப்படியும் தனிவழியும் சென்றே நாளும்
தீப்புனலில் செல்வத்தைக் கரைக்க லானுர்;
முப்படிகள் மாநிலத்தார் உயரு தற்கே
முன்னேற்றம் எனுங்கொள்கை மனத்தி லேற்றி
இப்படித்தான் வாழ்வோம்யாம் மறவோ மென்றே
எந்நாளும் வாழ்ந்திடில்இவ் உலகம் போற்றும்!"

## "குற்றியலுகரமும் அற்றென மொழிப" என்ற காப்பியர் நூற்பாவிற்கு உரிய இடம் யாது?

[புலவர் திருமங்கலம் வை. தங்கமணி]

ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர் தந்த தொல்காப் பியத்தின்படி தமிழ் மொழிக்கே உரிய எழுத்துகள் சார்பு மூன்றினையும் சேர்த்து முப்பத்து மூன்று. இவைகளில் மொழிக்த முதலில் வரும் எழுத்துகள் இருபத்திரண்டு. மொழிக்கு இறுதி யில்வரும் எழுத்துகள் இருபத்து நான்கு. ஆக நாற்பத்தாறு எழுத்துகள். இந்த நாற்பத்தாறும் மொழிமுதலும் இறுதியுமாக வந்தாலும் மேலே கூறிய முப்பத்து மூன்றில் அடங்கும் என்பார். இவைகளுள் உயிர், மெய், சார்பு, உயிர்மெய் என்றெல்லாம் பிரித்துக் காட்டினாலும், மொழிமுதல், மொழிஇறுதி ஆகிய வற்றில் வரும் எழுத்துகளை மெய், உயிர் ஆகிய இரண்டுமாகவே கருதுவர். நிறுத்த சொல்லின் ஈறோ அல்லது குறித்து வருகிளவியின் முதலோ உயிர்மெய்யாகக் கூட இருந்தாலும், தொல்காப்பியர் அவற்றை உயிர்மெய்யாகக் கருதி எங்கும் விதிவகுத்துள்ளதாக யாண்டும் காண்கிலோம்.

நிறுத்த சொல்லின் ஈறுயின் உயிராகவும், குறித்து வரு கிளவியின் முதலாயின் மெய்யாகவும் கருதுகிறார். இதோ:

> "மூன்று தலையிட்ட முப்பதிற்று எழுத்தின்
> இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது
> அறுநான்கு ஈற்றொடு நெறிநின்று இயலும்
> எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
> மெய்யே உயிர் என்று ஆயீ ரியல"

[தொல். எழுத்து. புணரியல்: 1.]

எடுத்துக் காட்டு :

பால் : ப் + ஆ + ல் :
மெய் முதல் மெய் ஈறு.

ஆல் : ஆ + ல் :
உயிர் முதல் மெய் ஈறு.

பல : ப் + அ + ல் + அ :
மெய் முதல் உயிர் ஈறு.

ஆலை : ஆ + ல் + ஐ :
உயிர் முதல் உயிர் ஈறு.

இவ்வாருக இருவகையாகக் கொள்வர். இவ்வாருகப் பொதுவிதி கூறியவர் சிறப்பு விதியாக 'அவற்றுள், மெய்யீறெல் லாம் புள்ளியொடு நிலையல்' (புணரியல் : 2.)

முற்கூறிய மெய் முதல்—மெய் ஈறு, உயிர் முதல்—மெய் யீறு, மெய் முதல்—உயிர் ஈறு, உயிர் முதல்—உயிர் ஈறு என்பவற்றுள் நிறுத்த சொல்லின் ஈறு, புள்ளி பெற்றே நிற்கும். குறித்துவரு கிளவியின் முன் மெய் வருவதில்லை. ஏன்? முன்னர் மொழிமரபு இருபத்தெட்டாம் நூற்பாவில் 'உயிர் மெய் அல்லன மொழிமுத லாகா', என்று கூறியிருப்பதால் என்றறிக.

இளம்பூரணர் இந் நூற்பாவிற்கு 'மேல் மெய்யும், உயிரும்' என்று கூறிய இரண்டனுள் மொழிக்கு ஈருய மெய்யெல் லாம் புள்ளிபெறுதலோடு நிற்கும், முதலாயவை யெல்லாம் புள்ளி இழந்து நிற்கும், என்று கூறி :

'மரம்' என்ற எடுத்துக் காட்டுத் தந்து, மேலும் மொழி முதன்மெய் புள்ளியொடு நில்லா தென்ஞது, ஈறெல்லாம் புள்ளியொடு நிலையல் என ஈற்றின்மேல் வைத்துக் கூறிய வதனுன், அவ்வீற்றின்மெய், உயிர் முதன் மொழி வந்தவிடத்து அஃது ஏற இடங்கொடுக்கும் என்பது பெறப்பட்டது, என விளக்குவார்.

தொல்காப்பியர் சொல்லின் முதலைச் சொல்லாது இறுதியினையே எண்ணிச் சொல்லும்போது இறுதி புள்ளிபெறும் ஆனல் முதல் புள்ளி இழந்து நிற்கும். இறுதி புள்ளி உயிர் வந்தால் ஏற இடங்கொடுக்கும் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும். இதுவே ஏற்புடைத்து—பொருந்துவது எனக் கொண்டால்; அடுத்துவரும்.

"குற்றிய லுகரமும் அற்றென மொழிப"
"உயிர் மெய் ஈறும் உயிரீற் றியற்றே"

என்ற நூற்பாக்களுக்கு எவ்வாறு பொருள்கொள்வது?

"அவற்றுள்.
மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்"

என்ற நூற்பா இறுதியின்றி முதலையும் சுட்டும் என்ருல் காப்பியர் உயிர் மெய்யீறு உயிரீற் றியற்றே, என்று மீண்டும் இறுதியைச் சுட்டியிருக்க வேண்டாமே! காப்பியர் போக்கே தனிப் போக்கல்லவா? ஓரிடத்தில் இறுதியைச் சொன்ஞல்—பிறிதோர் இடத்தில் முதலைச் சொல்லும் வழக்கு உடையவர் அல்லரோ? அவ்வாறிருக்க மேலே கூறிய

'குற்றிய லுகரமும் அற்றென மொழிப', என்ற நூற்பாவிற்கு; மொழியீற்றுக் குற்றியலுகரம் புள்ளி பெற்று உயிர் ஏற இடங்கொடுக்கும்—மொழிமுதல் குற்றியலுகரம் புள்ளி இழந்து காணப்படும் என்றுதானே பொருள் கொள்ள வேண்டும். ஏன்? இந்நூற்பா மாட்டேற்றல்லவா? அதனோடு புள்ளி இழந்த குற்றியலுகரம் என்று ஒன்று உண்டா? இவ்வினா எழாதா?

குற்றியலுகரம் புள்ளி பெறும் என்றால், முன்னர் சார்பு எழுத்துகளைச் சொல்லும்போது—

அவைதாம்.
''குற்றிய லிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத் தோரன்ன''

என்ற நூற்பாவிற்கு இளம் பூரணர் கூறிய உரையும் 'சந்தனக் கோல் குறுகியவிடத்தும் பிரப்பங்கோல் ஆகாது', என்று உவமை கூறி, சார்புக்கு விளக்கம் தந்ததற்கும் முரணாக இல்லையா? முன்பு ஒரு நூற்பாவிற்கு ஒருவித உரையும் பின் அதே கருத்துடைய நூற்பாவிற்குப் பிறிதோர் உரையும் கூறுவது உரையாசிரியருக்கு உகந்ததுதானா?

குற்றியலுகரம் புள்ளிபெறும் என்று காப்பியர் கருதி இருப்பாரேயானால்—பின்னால் எழுத்துகளுக்கு 'வடிவம்' கூறுமிடத்தாவது கூறியிருக்கமாட்டாரா?

மகரத்தின் வடிவம் கூறுமிடத்து:

''உட்பெறு புள்ளி உருவா கும்மே''

என்றும், மெய்யின் வடிவம் கூறுமிடத்து:

''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்''

என்றும், எகர ஒகரத்தின் வடிவம் கூறுமிடத்து, 'எகர ஒகரத் தியற்கையும் அற்றே',—என்றும், உயிர் மெய்யின் வடிவம் கூறுமிடத்து:

''புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே',

இவ்வாறு மகரத்திற்கும், மெய்க்கும், எகர ஒகரத்திற்கும், உயிர் மெய்க்கும் வடிவம் கூறியவர்—குற்றியலுகரத்திற்குத் தனிவடிவம் உண்டெனில் கூறாது விடுவாரா? என்றால் குற்றியலுகரம் அளவால் குறைவே தவிர வடிவால் வேறுபாடு இல்லை என அறியலாம்.

'குற்றியலுகரமும் அற்றென மொழிப',-என்ற நூற்பாவிற்கு மேதகு 'பாவாணர்' அவர்கள் இந் நூற்பா 'மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்' என்ற நூற்பாவிற்குப் பின் நிற்பதால் இஃது மாட்டேறு ஆகையால் குற்றிய லுகரமும் மெய்யீறு போலப் புள்ளிபெறும் என்பதே போந்த பொருளாம். மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்', 'எகர ஒகரத்தியற்கையு மற்றே,' என்று ஆசிரியர் மாட்டியவிடத்தும் எகர ஒகரம் புள்ளி பெறும் என்பதே கருத்தாதல் தெளிவாம். ஆதலால் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் குற்றியலுகரம் புள்ளி ஈறுபோல உயிரேற இடங்கொடுக்கும் என்று உரை கூறுவது மாட்டேற்றுக்கு, முற்றிலும் பொருந்தாது. 'இதுவே பேராசிரியருக்கும், சிவஞான முனிவருக்கும் சங்கயாப்புடையார்க்கும் கருத்தாம்',—என்று கூறியுள்ளார்.

பாவாணர் கூற்று என்ன? உயிர் ஏற இடந்தரும் என்று கூறுவது தவறாகும். மெய்போலக் குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்றே கூறவேண்டும் என்கிறார். குற்றியலுகரம் புள்ளி பெறும் என்று தொல்காப்பியர் தாம் எழுதிய காப்பியத்தில் எங்கேனும் நூற்பா செய்துள்ளாரா? இல்லையே! அவ்வாறிருக்க காப்பியர் எண்ணத்திற்கு ஏற்புடைத்தல்லாத உரை வகுத்தல் உகந்ததுதானா?

'மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்'. 'உயிர் மெய்யீறு உயிரீற் றியற்றே,' என்று முன்னும் பின்னும் ஈற்றினையே சுட்டு வதால் காப்பியருக்குச் சொல்லின் ஈற்றினைக் கூறுவதுதான் நோக்கம் என்று கூறி முன்னவர் உரைகளை எலலாம் மறுப்ப தாயின் இவ்விரு நூற்பாக்களுக்கும் இடை நிற்கும் 'மாட்டேற்று' நூற்பாவான 'குற்றியலுகரமும் அற்றென மொழிப' என்ற நூற்பா இவைகள் இடையிலேயே நிறுத்தப்பட்டால் மீண்டும் தவறு நடந்துவிடும் அன்றோ? என்றால் அந் நூற்பாவிற்கு உரிய இடம்யாது?

'மெய் யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்'

'உயிர்மெய்யீறு உயிரீற் றியற்றே'
குற்றிய லுகரமும் அற்றென மொழிப—

என்று இடம் மாற்றி ஒழுங்கு படுத்துவோமேயானால்:

குறித்து வருகிளவி முதலில் மெய்வருதல் இல்லை. ஏன்? 'உயிர்மெய் அல்லன மொழிமுதலாகா' என்று முன்னர் கூறிய தாலும் மொழிமுதல் வரும் எழுத்து மெய்ப் புள்ளி இழந்துவிடும்.

ஆனால் நிறுத்த சொல் இறுதி புள்ளி பெற்றே நிற்கும். ஆகவே தான் 'புள்ளியொடு நிலையல்' என்று சிறப்பித்துக் கூறினாரே யன்றி 'மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்' என்ற நூற்பா விற்குக் கூறியது கூறலாகாது என்றால் உயிர்மெய் எவ்வாறு ஈறாகும் என்ற வினா எழாதா? எழும், உயிர் மெய்யீறு உயிர் ஈறாகவே கருதப்படும் என்பர்.

பின் 'குற்றியலுகரமும் அற்றென மொழிப' என்றால் 'குற்றிய லுகரமும் உயிரீறாகவே கருதப்படும்' என்று கொண்டால் இந்த மாட்டேற்று நூற்பாவிற்குப் பொருள் பொருத்தமாக அமை வதைக் காணலாம். முன்னர் சார்பு கூறிய விடத்து இளம் பூரணர் உரையும் 'சந்தனக் கோல் குறுகியவிடத்தும் பிரப்பங்கோல் ஆதல் இல்லை' என்ற உவமையும், 'எகர ஒகரத்தியற்கையும் அற்றே' என்ற மாட்டேற்று நூற்பாவிற்குக் கூறிய உரையும் பொருந்துமாற்றினையும் காணலாம்.

---

## வாழ்த்துகிறோம்

கழகப் புலவராக அமர்ந்து பல ஆண்டுகள் பணியாற்றி, அகராதித் தொகுப்புக்கலையில் பயிற்சி பெற்று, இப்போது தமிழில் நூற்றுக்கு மேற்பட்ட அகராதிகளையும், ஆங்கிலத்தில் பத்து அகராதிகளையும் தொகுத்துள்ள ஈரோடு வாசவிக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், 'பன்மொழிப்புலவர்', 'சொல்வாய்வுக் கலைச் செல்வர்' திரு. மு. சதா சிவம் எம்.ஏ., எம்.லிட்., டிப். லிங். அவர்கள் செப்டம்பர் 2ஆம் நாள் இங்கிலாந்துக்குப் புறப்படுகிறார். இங்கிலாந்தில் எக்சிடர் பல்கலைக் கழகத்தில் செப்டம்பர் 9 முதல் 12ஆம் நாள் வரை நடைபெறும் உலக அகராதி மாநாட்டில் கலந்துகொள்ளுமாறு அழைக்கப் பெற்றுள்ளார். ஆங்கிலத்தில் அடுக்கு மொழி அகராதி (Dictionary of Alliterative and Rhythmic Pharases) ஆங்கிலத்தின் அழகுகள் (Beauties and Peculiarities of English) வாக்கியத் தொடக்க அகராதி (DICTIONARY OF SENTENCE—INTRODUCERS) ஆகிய மூன்று நூல்களை அந்த உலக அகராதி மாநாட்டில் வெளியிட்டு உலக அறிஞர்களின் பாராட்டுதல்களைப் பெற உள்ளார். சென்ற ஆண்டு தில்லியில் சவகர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற இந்திய அகராதி மாநாட்டில் தமிழ்மொழியின் சார்பில் கலந்துகொண்டு இந்திய அறிஞர்களுள் அகராதித் துறையின் முன்னவராக இருப்பதாகப் பாராட்டப் பெற்றார். பேராசிரியர் மு. சதாசிவம் அவர்கள் உலக அகராதி மாநாட்டிலும் சிறப்பும் பெருமையும் பெற்றுத் திரும்புமாறு வாழ்த்துகிறோம்.

# உலக உருண்டை

[க. சி. கமலையா]

## மண்ணும் மனிதனும்

நாம் வாழும் நிலவுலகை 'நிலமென்னும் நல்லாள்' என்பார் திருவள்ளுவர். அவளை 'நீராரும் கடலுடுத்த நிலமடந்தை', எனப் போற்றுவார் சுந்தரம் பிள்ளை. அவள் தன்னை அகழ் வாரையும் தாங்கும் பொறையுடையாள். 'பொறுத்தவர் பூமியாள் வார்' என்ற சொல் வழக்குக்கூட புவித்தாயுடன் தொடர்பு பற்றி எழுந்ததுபோலும். 'உலகம்' என்ற சொல் பெருவழக்காய் நில உருண்டையைக் குறிப்பதாகும். நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் எனப் பூதம் ஐந்தாகும். அவற்றாலானது உலகம் என்பார் தொல்காப்பியர்.

*நிலம், தீ, நீர், வளி, விசும்போ டைந்தும்*
*கலந்த மயக்கம் உலகம்.*

முழு உலகச் சிறு பகுதிகளையும் 'உலகம்' என்ற சொல்லாலும் அவர் குறிப்பார். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகியவை முறையே காடுறை உலகம் என்றும் மைவரை உலகம் என்றும் தீம்புனல் உலகம் என்றும் பெருமணல் உலகம் என்றும் சொல்லப் படும் எனவும் உரைத்துள்ளார்.

*மண் திணிந்த நிலனும்*
*நிலன் ஏந்திய விசும்பும்*
*விசும்பு தைவரு வளியும்*
*வளித் தலைஇய தீயும்*
*தீ முரணிய நீருமென்றாங்கு*
*ஐம்பெரும் பூதத் தியற்கை*

என்று பாடுவார் சங்கத்துச் சான்றோர் முரஞ்சியூர் முடிநாகராயர்.

மண், பெண், பொன் என்ற மூன்றையும் துறந்தவனைத் துறவி என்கிறோம். நிலத்தின்மீது உரிமை கொண்டாடி அதன் பலனைப் பெறுகின்றவன் மண்ணாசை கொண்டவன். பெண், பொன் என்பனவும் மற்றும் பிறவும் மண்ணுக்கே சொந்தம்.

*மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே.*

பிறந்ததிலிருந்து இறக்கும் வரை உயிர்களுக்கு உணவு இன்றி யமையாதது. எவ்வாறு என்று கேட்கத் தோன்றும்.

மக்கள் யாக்கை உணவின் பிண்டம்
அறிவின் மிக்கோய் புறமறிப் பாராய்,

என்று விடை பெறுகின்றோம். உணவாலாகிய தொகுதி தானே இவ்வுடம்பு. இறுதியில் மண்ணோடு மண்ணாய் விடுகிறது. 'மண்ணும் நீயே, மண்ணாவதும் நீயே' என்று சொல்லி மண்ணைத் தூவிச் செத்தவனைச் சாகவிருப்பவர் மண்ணில் புதைப்பர்.

எழு கடல் மணலை அளவிடலாம். பிறவிகளை அளவிட முடியாது. பிறவிகளின்போது எடுத்த உடம்புகளைத் தின்றும் கொன்றும் படைத்தும்

கழுகொடு நரியும் எரிபுவி மறலி
கமலனும் மிகவும் அயர்வானார்
கடலுள தபயம் அடிமையுன் அடிமை
கடுகியுன் னடிகள் தருவாயே

என்று முருகப் பெருமானிடம் அருணகிரிநாதர் முறையிடுகிறார்.

ரஷ்யப் பெருமகனார்—நாவலாசிரியர்—லியோ டால்ஸ்டாய் வரைந்த கதையொன்றை நினைவு கூர்தல் பொருந்தும். ஞாயிறு எழும்பி விழும் வரை புறப்பட்ட இடத்திலிருந்து ஓடி அதே இடத்தை அடையும் வரையில் அடங்கியுள்ள நிலம் அவனுடையது என்று கேட்ட ஒருவன் பேராசை மிகுதியால் பெருமளவு நிலம் கொள்ளும் எண்ணத்துடன் சேர வேண்டிய இடத்தைச் சேராது களைத்து விழுந்து உயிர் துறந்தான். அவனுக்குக் கிடைத்த இடம் ஆறடிதான். அவன் புதைக்கப்பட்டு மண்ணோடு மண்ணானான். விண்ணளவு செல்வம் பெற விரும்பினாலும் மண்ணோடு மண்ணாவது திண்ணம்.

ஞாலமும் ஞாயிறும்

பேரண்டம் அளவிட முடியாதது. என்று தோன்றியது, என்று முடிவுறும் என்பதை அளவிட விஞ்ஞானியும் இன்றுவரை தோன்றியதில்லை; இனியும் தோன்றான். பேரண்டத்தில் இயங்கும் கோள்கள் எத்தனை என்பதையும் நாமறியோம். எனினும் நாமிருக்கும் நிலவுலகம் பற்றியும் அதில் வதியும் உயிர்களும் செடி கொடிகளும் மரங்களும் காடுகளும்—ஏன் அனைத்துமே—வாழ உதவும் ஞாயிறு பற்றியும் தெரிந்து கொண்டிருக்கிறோம். சூரியனிலிருந்து ஒளிபெறும் சந்திரன் பற்றியும் அறிவோம்.

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக

ஆழ்வார் இடராழி நீங்க வேண்டுமென்று திருமாலுக்குச் சொல்ல லங்கல் சூட்டினார். ஞாலமும் ஞாயிறும் திங்களும் உலக மக்கள் அனைவரும்—சமயம், நிறம், உயர்வு, தாழ்வு என்பனவற்றிலடங் கும் எல்லாரும்—அறிந்தவை. 'வியன் ஞாலம்' 'நனந்தலை யுலகம்' 'இரு நிலம்' என்றெல்லாம் இப்பாரை, பாவலர் உரைப்பர். இதற்கு ஒளி கொடுத்து அளிவழங்கும் பகலவனை

'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு'

என்பார் நக்கீரர். சாயுங்காலக் கதிரவன் மேற்கு மலையை அடையும் பொழுது அவர் கண்ட காட்சி ஒரு சொல்லோவியமாகும்.

நெடுவேள் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டி மீனருந் தும்
பைங்காற் கொக்கின் மிரைபரை யுகப்ப
எல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு.

எகிப்தியர் கற்பனை

எகிப்திய நாகரிகம் மிகப் பழமையானது. பழங்கால எகிப்தியர் இந்நில உலகைப் பற்றியும் பேரண்டத்தைப் பற்றியும் கொண்டிருந்த கருத்து வியப்பூட்டுவதாகும். பேரண்டத்தை ஒரு மிகப் பெரிய பெட்டியாகவும் அப் பெட்டியின் மேற்பகுதி வான மென்றும் அவ் வானத்திலிருந்து தொங்கும் விளக்குகள் விண்மீன்களென்றும் அவர்கள் கருதினார்கள். எகிப்து பெட்டி யின் கீழ்த்தரையில் நடுவில் இருக்கிறது, பேரண்டப் பெட்டியின் நான்கு மூலைகளிலிருந்து நான்கு ஓங்கும் பெருமலைகள் வானத் தைத் தாங்கி நிற்கின்றன. மலைத் தொடர்ச்சிகள் பெட்டியின் நான்கு பக்கங்களிலும் ஒட்டியுள்ளன. மலைகளையொட்டி ஆறொன்று பேரண்டத்தைச் சுற்றி ஓடுகிறது. அந்த ஆற்றில் கிழக்கே ஒவ்வொரு நாட் காலையிலும் தோணியில் சூரியன் நெருப்புருண்டையாய்ப் பிறக்கிறான். கதிரவனை எகிப்தியர் 'ரா' வென்றழைத்தனர். தோணியில் செல்லும் பொழுது வளர்ந்து கொண்டே பெருகும் ஒளியுடன் செல்கின்றான். நண் பகலில் அவன் ஒளிப் பிழம்பாய்த் திகழ்கின்றான். பிறகு மற்றொரு தோணிக்குத் தாவி ஆற்றுப் பயணத்தைத் தொடர்ந்து டெய்ட் (Daít) என்ற பள்ளத்தாக்கை ரா அடைகிறான். என்றும் நின்று நிலவும் இரவு டெய்ட் பள்ளத்தாக்கைக் கௌவியுள்ளது. படிப் படியாக ஒளி குன்றும் ரா பல படகுகளுக்குத் தாவுகின்றான். அவ்வப்போது பாம்பொன்று அவனைத் தாக்கி அவனொளியைக்

குன்றச் செய்கிறது. அதைத்தான் சூரியகிரகணம் என்று சொல்கின்றோம்.

பேரண்டத்தைச் சுற்றிப் பாயும் அதே ஆற்றில் சந்திரனும் ஒரு படகில் பயணம் மேற்கொள்ளுகிறான். ஒவ்வொரு மாதமும் சந்திரனை ஒரு பன்றி தாக்குகிறது. இரண்டு வாரம் போராடி சந்திரன் வெற்றி பெறுகிறான். இதன் பிறகு மீண்டும் பிறந்து இரண்டு வாரங்களில் முழுமை எய்துகிறான். சில வேளைகளில் வானுலகப் பன்றியொன்று அவனை விழுங்கி விடுகிறது. அதுவே சந்திரகிரகணம் என்று சொல்லப்படுகிறது.

இன்றைய பூவுலகும் அதன் இறுதி நிலையும்

முன்னோர் கற்பனையிலிருந்து விடுபட்டுப் பூவுலகம் பற்றிய உண்மைகளை விஞ்ஞானிகளும் நில நூலாரும் தம் ஆராய்ச்சித் திறனால் வெளிப்படுத்தியதையும் தெரிந்து கொள்ளலாம். பூமி மேடு பள்ளங்களையும் ஓங்கு மலைகளையும் குழி பள்ளத்தாக்குகளையும் ஆழ்கடல்களையும் கொண்டு கணித நூலின் வரையறைக்குட்படா உருண்டையாகும். எனினும் நில உருண்டையினின்றும் அப்பால் சென்ற விண்வெளி வீரர் ''வழுவழுப்பான 'பில்லியர்டு'ப் பந்து போன்று பூமி தோன்றுகிறது'' என்று கூறியுள்ளார். பசிபிக் பெருங்கடலின் அடித் தளத்திலிருந்து எவரெஸ்டு மலையுச்சி 12 மைல் உயரம். பூஉருண்டையின் வெளிப்பரப்பு அதன் நடு மையத்திலிருந்து 4000 மைல் தொலைவிலிருக்கிறது. அதாவது! பூகோளத்தின் அரைவிட்டம் 4000 மைல் நீளமானது. பூமியின் நிறை 6,595,000,000,000, 000,000,000 டன்களாகும், அதாவது ஆறு கோடியே ஐம்பத்தொன்பது லட்சத்து ஐம்பதினாயிரம்கோடி கோடி டன்கள்.

பூமண்டலத்தின் இறந்தகால வரலாற்றைவிட அதனுடைய எதிர்காலத்தைச் சொல்ல முடியும். இன்னும் சில நூறு கோடி ஆண்டுகளில் சூரியன் ஓர் இராக்கத ஒளிப்பிழம்பாய் வளரும். வெள்ளியின் சுற்றுப்பாதை அளவிற்குப் பெரிதாகித் தற்போது உமிழ்வதைவிட நூறு மடங்கு வெப்பத்தைக் கக்கும். பூமி சூடாகிக் கடல்கள் கொதிக்கும். காற்று மண்டலத்தை நீராவி மூடி மிகமிக எதிர்ப்புச் சக்தியுள்ள சில கருவணுக்களைத் தவிர பூமியில் அனைத்தும் அழியும்; இந்நிலையில் நூறு கோடி ஆண்டுகள் நிலவும். படிப்படியாகச் சூரியன் தேய்ந்து, வலு விழந்து, குறுகிக் கூனியாகும். பூமி குளிரவும் நீராவி சுருங்கிப் பெருங்கடல்களாகும். பனிக்கட்டியும் பனியும் பூமி உருண்டையை மூடி நிற்கும். சிறிது எரிமலை இயக்கம் தென்படும். எனினும்

நின்று நிலவும் இருள் நெருங்க உயிரில்லாப் பாழ்நிலையே பூமியின் இறுதிநிலை.*

பூமி பற்றிய சில புள்ளி விவரங்கள்*

| | | |
|---|---|---|
| நடுக்கோட்டின் அரைவிட்டம் | 3,963.34 | மைல்கள் |
| தலைகீழாக அரைவிட்டம் | 3,949.99 | ,, |
| முழு உருண்டையெனில் அரைவிட்டம் | 3,958.89 | ,, |
| நடுக்கோட்டில் சுற்றளவு | 24,902 | ,, |
| நிறை (weight) | $6.594 \times 10^{21}$ | டன்கள் |
| சராசரி அடர்த்தி (Density) | சதுர அடிக்கு 345 | பவுண்டுகள் |
| மொத்தப் பரப்பு | 196,940,000 | சதுர மைல்கள் |
| நிலப் பரப்பு | 56, 222,000 | ,, |
| நீர்ப்பரப்பு | 140,718,000 | ,, |
| கோளப் பாதையின் சராசரி வேகம் (Speed) | நொடிக்கு 18·5 | மைல்கள் |
| அருகிலுள்ள விண்மீன்களின் தொடர்பைக் கொண்டு சூரியனின் விரைவளவு (velocity) | நொடிக்கு 12.05 | மைல்கள் |
| பால் மண்டலத்தின் (Galexy) மையத்திற்கேற்ப சூரியனின் விரைவளவு | நொடிக்கு 136 | மைல்கள். |

மனிதன் நூருண்டு காலமும் சற்றுக் கூடுதலாகவும் வாழ முடியும். மேலும் வாழ முடியாது. இன்னும் நூறு கோடி ஆண்டுகளின் இறுதியில் பாழ்நிலையடையும் பூமியின் காலத்தையும் மனிதனின் வாழ்நாட் காலத்தையும் ஒப்பிட்டால் பின் சொல்லப் பட்டது இல்லா நிலையெய்தும்.

'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்'

என்பதில் அணுவின் நுண்மையைச் சொல்லி, குறளின் பெருமை விளக்கப்படுகிறது. ஆனால் இன்றைய விஞ்ஞானி அறிவின் முதிர்ச்சியால் அணுவைப் பிளந்து சூரியனின் ஒளியையும் வெப்பத்தையும் தடுக்க முடியாவிட்டாலும் அதன் உதவி கொண்டு பூவுலகைப் பாழாக்கிவிட முடியும். உலகம் உய்வ தெவ்வாறு? இங்கு உலகம் உயிர்களின் மேல் நின்றது.

— — —

* Arthur Beiser : *Our Earth* (Arco Publications, London.)

# ஆட்சிமொழிச் சிந்தனைகள்

## 15. PROTOCOL

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை
மகாகவி பாரதி நகர், சென்னை-600039.]

பெரியவர்—சிறியவர், உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்னும் வேறுபாடுகள் உலகம் தோன்றியக்கால்தொட்டு உலவி வருகின்றன. முன்வரிசை–பின்வரிசை என்னும் போட்டி என்றுமே இருந்துவந்துள்ளது. எனவேதான் நம்முடைய முற்கால அரசர்கள், அனைவரையும் அணைத்துச் செல்லும் அரிய முறையாக, "வரிசையறிந்து வரவேற்றல்" என்னும் சீரிய போக்கினைப் போற்றிவந்துள்ளார்கள்.

கண்டிமன்னன் பரராசசிங்கன் கற்கண்டுச் சொற்கொண்டு பாடிய பாடலின் இரண்டு வரிகள் இப்போது நினைவிற்கு வருகின்றன.

"மரபு தங்கிய முறைமை பேணிய
பன்னர் போயிலென் ஆகிலென்"

என்னும் இனிய வரிகளாகும் அவை. "மரபு தங்கிய முறைமை" என்னும் தொடர் நம் மனத்தைப் பறித்துக்கொள்ளும் மாண்பு மிக்க தொடராக இலங்குவதைக் காண்கின்றோம்.

வகையறிந்து, வரிசையறிந்து, முறையறிந்து போற்றும் இந்தப் பண்பு இன்று நேற்றன்று, சங்க காலம் முதற்கொண்டே மங்காமல் மறையாமல் தொடர்ந்துவரும் தொன்னெறியாகும்.

வந்தாரையெல்லாம் வாழ்த்தி வரவேற்று வாழவைக்கும் இனத்தைச் சேர்ந்தவன்தானே தமிழன்! வரிசையறிந்து போற்றுதல் அவனுக்குக் கைவந்த கலையாயிற்றே!

"ஆட்சிமொழிச் சிந்தனைகள்" என்னும் தொடர்வரிசையில் இதுவரை சிறுசிறு மீன்களே கிடைத்துவந்தன என்றுதான் சொல்லவேண்டும்! ஏனென்றால் இப்போது பெரிய மீன் ஒன்று அகப்பட்டுள்ளது! அதுதான் Protocol என்னும் சொல்லாகும்.

"புரொடொகால்" என்னும் இந்தச் சொல் பலபொருள் ஒரு மொழியாகும்! ஆயினும் நமக்கு ஈண்டுத் தேவைப்படும் பொருள் ஒன்றே ஒன்றுதான். அஃதாவது மேலே விளக்கப் பெற்ற "வரிசையறிந்து வரவேற்றல்" என்னும் முறையிலே அமைந்த பொருளேயாகும்.

அகராதி தருகின்ற சுருக்கமான பொருள் diplomatic etiquette என்பதாகும். வெப்ஸ்டர் அகராதி நீளமான விளக்கத்தை, ஆயினும் மிகவும் பொருத்தமான விளக்கத்தை, அள்ளித் தருகின்றது. அதனை முழுமையாகப் படித்துத் தெரிந்து கொள்ளுதல் மிகவும் தேவையென்னும் காரணத்தால் அப்படியே கீழே தருகின்றேன் :—

"A rigid long established code prescribing complete deference to superior rank and strict adherence to due order of precedence and precisely correct procedure as in diplomatic exchange and ceremonies and in the military services."

இந்த விளக்கத்தைப் படித்தவுடன் இரண்டு முக்கிய கருத்துகள் இதில் இணைந்துநிற்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்கின்றோம். முதலாவது கருத்தை எடுத்துக்காட்டி அதனை நாட்டுவதற்கு முன்பு, இணையான இரண்டு ஆங்கிலச் சொற்கள் நம் கருத்தைக் கவர்கின்றன! Convention, tradition என்னும் இரண்டு சொற்களாகும் அவை. இவற்றை முறையே "வழக்காறு" என்றும் "மரபு" என்றும் மொழிபெயர்க்கின்றோம். எனினும் இவற்றையே ஒன்றிற்கு ஒன்றாக மாற்றித் தலைகீழாக மொழிபெயர்ப்பவர்களும் இல்லாமலில்லை!

வழக்காற்று நெறியா? மரபு நெறியா? என்பதுதான் முதலாவது வினாவாகும். "எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் அப்படிச் செப்புதன் மரபே" என்று "மரபிற்கு" இலக்கணம் இயம்புகிறார் நன்னூலாசிரியர். இதிலிருந்து பொதுக்கருத்து ஒன்றை நாம் புரிந்துகொள்கின்றோம். நீண்டகாலமாகப் பழகிவரும் எதுவும் மரபாக மாறி விடுகின்றது! வெப்ஸ்டர் விளக்கத்தில் உள்ள Rigid long established code என்னும் தொடர் "மரபு" என்னும் சொல்லே ஈண்டு இயல்பாகப் பொருந்துகின்ற இனிய சொல் என்பதை எடுத்துக்காட்டுகின்றதன்றோ?

இரண்டாவது கருத்தை இப்போது காண்போம். Strict adherence to due order of precedence என்னும் தொடரிலே தொக்கிநிற்கின்றது இந்தக் கருத்து. தகுதியின் நிலையை மிகுதியாகக் காட்டுகின்றது இந்தத் தொடர்!

எந்தச் சொல்லுக்கும் இன்றியமையாது தேவைப்படுவது 'பகுதி" என்னும் உறுப்பாகும். இதேபோன்று Protocol என்னும் சொல்லுக்கு இன்றியமையாது தேவைப்படுவது "தகுதி" என்னும் கருத்தாகும்.

"மரபு", "தகுதி" என்னும் இரண்டு கருத்துகளும் இணைந்து இசைபாடுகின்றன! கட்டுரைத் தொடக்கத்தில் குறிக்கப்பெற்ற "மரபு தங்கிய முறைமை" என்னும் தொடரை இப்போது எண்ணிப்பார்த்தால், செஞ்சொல் இன்பம் நெஞ்சம் எல்லாம் நிழலாடி நிற்கும்.

என்றைக்கோ உயர்ந்துவிட்டவன் தமிழன்! இன்றைக்கு அவனைப் பார்த்துச் சிலர் ஏளனம் பேசுகின்றனர்! என்னே அறியாமை!

நாம் கண்ட இரண்டு சொற்களையும் இணைத்துப் பார்க்கும் போது "மரபுத்தகுதி" என்னும் கூட்டுச்சொல் பிறக்கின்றது. சிறிது நின்று சிந்தித்துப் பார்த்தால், இரட்டைக் குழந்தைகள் உடலோடு உடல் ஒட்டிக்கொண்டு பிறந்திருப்பதைப்போல் தோன்றுகின்றதல்லவா? இரண்டு உடல் இருந்தபோதிலும் ஒருயிராக இணைக்க இயலுமா என்று நானும் நண்பர் எஸ். எஸ். இராமசாமி அவர்களும் எண்ணிப்பார்த்தோம். "மரபுத் தகைமை" என்று சொன்னால், மேலும் இனிக்குமே என்று மெல்லென மொழிந்து நண்பர் புன்னகை பூத்தார்! தமிழின் நறுஞ்சுவை கண்டு எனக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது!

அதன்பின்னர் வண்டமிழ் வள்ளுவர் விரைந்தோடி வந்து வானமுதை வாரி வழங்கினார். அவர் சொன்னார் :

*"தக்கார் தகவிலர் என்பது அவரவர்*
*எச்சத்தால் காணப் படும்"*

"தகவிலர்" என்னும் கூட்டுச் சொல்லிலே உள்ள "தகவு" என்னும் சொல் "மகவு" பிறந்துவிட்ட மகிழ்ச்சிபோல் இனித்தது.

ஆம். விடை கிடைத்த பின்னர், தடை என்ன?

Protocol = மரபுத்தகவு.

---

## ஒழுக்கம்—ஒரு கேள்விக் குறி

ஒழுக்கம் உடையவர்கள் மூலையில் கிடக்க, ஒழுக்கமற்ற சிலரைச் செய்தித் தாள்களும், வார இதழ்களும் வானளாவப் புகழ்ந்து பாராட்டுகின்றன. அவற்றின் விளம்பரங்களைப் படித்து, அந்தப் புகழுரைகளை உண்மை என்று நம்பி விடுகின்றார்கள் பொதுமக்கள். இப்படிப்பட்ட சிலரைப் பார்த்தும் கேட்டும் இளைஞர்களின் மனத்தில் ஒரு திகைப்பு ஏற்படுகிறது. ஒழுக்கமில்லாமலே விழுப்பம் பெற முடிகிறதே என்று எண்ணிப் பார்க்கிறார்கள்; உடனே அவர்கள் உள்ளத்தில் நம்பிக்கை தளர்கிறது. —டாக்டர் மு. வரதராசனார்.

## 'வேட்டி'—ஒரு விளக்கம்

[பேராசிரியர் வி. ப. கா. சுந்தரம், மதுரை]

'செந்தமிழ்ச் செல்வி'யின் சென்ற இதழில் 'சொற்கள் சொல்லும் கதைகள் என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள கட்டுரையில் ருகoஆம் பக்கத்தில், துணி வெட்டப்படுவதால் 'வேட்டி' ஆயிற்று என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு மறுப்புகள் வருமாறு:

(1) வெட்டப்படுவது "வெட்டி" என்றாகும்; (ஒப்பு நோக்கு) நீர் வெட்டி, பாக்கு வெட்டி, மண் வெட்டி, புல் வெட்டி, மரம் வெட்டி.... பிற பிற சொற்கள்.

(2) "வேட்டி" என்று சொல்லாதற்கு "வேட்டு" என்பது மூலம் ஆதல் வேண்டும்; "வேட்டு" என்பது வெட்டுதல் பொருண்மையையுடைய சொல்லன்று. 'வேட்டு+இ=வேட்டி? என்றாயதென்றால்—'வேட்டு"—விழைந்து என்று பொருள் கூறி, அப் பொருளடியாக வேட்டி பிறந்ததென்றால் ஒப்புக் கொள்ளலாம்.

வெட்டு< வேட்டு< வேட்டி: இங்குப் பொருளில் வெட்டு வேறு; வேட்டு வேறு. மேலும் கட்டு—காட்டு, புட்டு, பூட்டு, திட்டு—தீட்டு இவை வேறுதல் போல—"வெட்டு, வேட்டு" சொற்கள் பொருளில் வேறானவை;—தொடர்பற்றவை; ஆனால் நட்டு—நாட்டு—இவை பொருள் தொடர்புடையவை. இவை போன்ற பொருள் தொடர்புடையவை அல்ல. வெட்டு—வேட்டு; கட்டி—காட்டி, மட்டி—மாட்டி என்பன வேறு பொருள் உடையவை; ஒரு பொருள் தொடர்பு அற்றவை. எனவே வெட்டப் பட்டது வேட்டி என்று வேர்ச்சொல் விளக்கம் தருவது பொருந்தாது.

(3) சங்க இலக்கியங்களில்—துண்டு, முண்டு, உடுக்கை, ஆடை முதலிய பல சொற்கள் இடம் பெற்றுள்ளன. வேட்டி—தமிழில் மிக மிகப் பிற்காலத்தில் காணப்பட்ட சொல்.

(4) "வேஷ்ட்" என்னும் சமசுகிருதச் சொல்லுக்குச் "சுற்றிக் கட்டு" என்று பொருள். "வேஷ்ட்" என்றவழிப் பிறந்த சொற்கள் சமசுகிருதத்திலும் அதன் இனமொழிகளிலும் பல நெடும் நூற்றாண்டுகட்கு முன்னரே தோன்றி—வளர்ந்து வளம் பெற்றுப் பல்கி உள்ளன. கிரேக்கம், பிரெஞ்சு, லத்தீன் முதலிய மொழிகளிலும் சுற்றிக் கட்டு என்ற பொருண்மையுடன் "வேஷ்ட்" வேர்வழிச் சொற்கள் பலப்பல. இவ்வாறு நான் சொல்லுவதால்—தமிழ்ப் பற்றில்லை என்பார் சிலர்; சொல்லை ஆய்வு செய்யும்போது பற்றற்று நடுநிலை கொண்டே ஆய்வு செய்தல் வேண்டும். பற்றுதல் காரணமாக வெள்ளியைத் தங்கம் என்று கூறலாமா?

# செய்திகளும் குறிப்புகளும்

## பாளையங்கோட்டையில் நேசமணி பெருவிழா

திருநெல்வேலித் தனித்தமிழ் இலக்கியக் கழகத்தின் சார்பில், பாளையங்கோட்டை அரசினர் சித்த மருத்துவக் கல்லூரியில், 12-6-'83 ஞாயிறு மாலை 'குமரித்தந்தை நேசமணி' அவர்களின் 89ஆவது பிறந்த நாள் பெருமங்கல விழா நடைபெற்றது. இலக்கியக் கழகத் தலைவர் பேராசிரியர் பா. வளன்அரசு விழாவுக்குத் தலைமை தாங்கினார். மாவட்டத் தலைமை நீதிபதி சீர்மிகு மு. பீற்றர் அவர்கள் 'குமரித்தந்தை நேசமணி' நூலாசிரியர் பொறியாளர் ஞான. தோமாவுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டுரை வழங்கினார். நெல்லை வ. உ. சி. இலக்கியப் பேரவைத் தலைவர் இல. இராமகிருட்டிணன் வாழ்த்துரை வழங்கினார். செயலாளர் பெ. இரா. வெள்ளத்துரை நன்றி கூறினார்.

## இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் கருத்தரங்கம்

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் பதினைந்தாவது மாநாட்டுக் கருத்தரங்கம் பாளையங்கோட்டைத் தூய யோவான் கல்லூரியில் 4—6—83, 5—6—83 ஆகிய இரு நாட்களும் சிறப்பாக நடந்தது. விழாவுக்கு மன்றத்தின் தலைவர் அறிஞர் வ. சுப. மாணிக்கம் தலைமை தாங்கினார். அறிஞர்கள் அகத்தியலிங்கமும், ஈ பி டி. தாமசும் வரவேற்றுப் பேசினர். தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ அரங்கநாயகம் மாநாட்டைத் தொடங்கி வைத்து, ஆய்வுக் கோவையை வெளியிட்டுச் சிறப்புரையாற்றினார். ஆய்வுக் கோவையைச் சதக்கத்துல்லா அப்பா கல்லூரித் தாளாளர் பதுகூர் ரப்பானி பெற்றுக் கொண்டார். மாநாட்டுச் சிறப்பு மலரைக் கல்லூரிக் கல்வித் துணை இயக்குநர் பேராசிரியர் கோ. சங்கரராசுலு வெளியிட்டார். சட்டமன்ற உறுப்பினர் சீர்மிகு கருப்பசாமி பாண்டியன் மலரைப் பெற்றுக் கொண்டார். பேராசிரியர் பா. வளன் அரசு நன்றி கூறினார். பிற்பகலில் ஆய்வுக் கட்டுரைகள் படித்தலும் கலந்துரையாடலும் நிகழ்ந்தன. பின்னர் செல்வி சிவகாமி, தாமரைச் செல்வி உடன் பிறப்பினரின் தமிழிசை விருந்து நடைபெற்றது. அறிஞர் மெ. சுந்தரம், ஈழ வேந்தன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

5—6—83ல் நடந்த வாழ்த்தியல் விழாவில் அறிஞர் மெ. சுந்தரம் தலைமை ஏற்க, ம. தி. தா. இந்துக் கல்லூரித் தாளாளர் அம்மையப்பன் வரவேற்புரை நிகழ்த்தினார். அறிஞர்கள் அகத்தியலிங்கம், வ. சுப. மாணிக்கம், முன்னாள் கல்லூரிக் கல்வி இயக்குநர் கா. மீனாட்சி சுந்தரம், வழக்கறிஞர் அழகிய நம்பி, தமிழ்ப்பெரும்புலவர் ஆ. அருளப்பன், இல. இராமகிருட்டிணன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். வாழ்த்தியல் பேருரையாற்றிய தமிழக நிதி, உணவு அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் உலகத் தமிழ்ச்சங்கத்துக்காகத் தமிழக அரசு ஒரு கோடி ரூபா செலவிடத் திட்டமிட்டுள்ளதாகவும் பழஞ்சுவடிகளைப் பேணிக் காக்கவும் அரிய நூல்களைப் பதிப்பிக்கவும் மூன்று நூறாயிரம் ரூபா வரை அரசு உதவி செய்யும் எனவும் குறிப்பிட்டார். பேராசிரியர் பா. வளன் அரசு அனைவருக்கும் நன்றி கூறினார்.

## திரு. வி. க. நூற்றாண்டு விழா

தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்களின் நூற்றாண்டு விழாவும் அவர் தோற்றுவித்த பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் முத்த விழாவும், இம் மாதம் 5, 6, 7ஆம் நாள்களில், திரு வி. க. மணி மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றன. டாக்டர் ம. பொ. சிவ ஞானம் அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்தார். மாண்புமிகு அமைச்சர் இராம வீரப்பன் அவர்கள் விழாத் தலைமையினை ஏற்றுத் திரு. வி. க.வின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்தார். அறநெறிச் செல்வர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் நூற்றாண்டு விழா மலரினை வெளியிட்டார். இவ்விழாவினை யொட்டிக் கவிஞர் மதிவாணன் தலைமையில் பாட்டரங்கமும், ராணி மேரிக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் திருமதி பு. பா. இராச இராசேசுவரி அவர்கள் தலைமையில் மகளிர் திருநாளும் நடைபெற்றன. செய்தி, மக்கள் தொடர்புத்துறை இயக்குநர் எஸ். டி. காசிராஜன். இ. ஆ. ப. அவர்கள் தலைமையில் நிறைவு விழா நடைபெற்றது. 7—8—83 காலையில் சபையில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானுக்கு வழிபாடுகள் செய்யப்பட்டன.

டாக்டர் ஔவை நடராசன், பேராசிரியர் திருமதி இராசலட்சுமி இராமச்சந்திரன், பேராசிரியர் செல்வி மு. இரகுபாய், திருமதி வி. கே. வனசாட்சி, திருமுருக கிருபானந்த வாரியார் குரு ஆகியோர் திருமுருக விசாகநம்பி, டாக்டர் க. சஞ்சீவி, திரு. டி. செங்கல்வராயன், டாக்டர் வை. இரத்தின சபாபதி ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். மூன்று நாள் விழாக்களில் முறையே பாலசுப்பிரமணிய பக்தஜன சபைத் தலைவர் சி நடராஜன், பி.ஏ., பி.எல்., திருமுருக விசாகநம்பி, சிறுவை நச்சினார்க்கினியன் ஆகியோர் வரவேற்புரை ஆற்றினர்.

# மதிப்புரை

## Folk Arts of the Tamils (தமிழர் நாட்டுப்புறக் கலைகள்)

[ஆசிரியர்: A. N. பெருமாள், வெளியீடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600113, 1983. ரூ. 10/- பக்கங்கள் xli+160.]

இந்நூல் ஆசிரியர் எழுதிய தமிழ் நூலின் ஆங்கில வடிவமாகும். ஏழு பிரிவுகளில் தொடக்கத்தில் கலைபற்றிய அறிமுகத்துடனும் இறுதியில் நாட்டுப்புறக் கலைகள்பற்றி ஆங்காங்கே தமிழ்ப்பாடல்களைப் பெய்து நூல் எழுதப்பட்டுள்ளது. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிலவும் நாட்டுப்புற ஆடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. வெளிநாட்டவர் புரிந்துகொள்ளும் வகையில் படங்களும் இணைக்கப்பட்டிருக்கலாம். தமிழிலக்கிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. நெல்லை, கோவை, குமரி என்ற மாவட்டப் பெயர் வடிவங்கள் தமிழ் நூல்களில் படிப்பார்க்கு விளங்கும். ஆங்கில நூலில் அவை சரியாகப் படிப்போர்க்கு விளங்கா. தமிழக நாட்டுப்புறக் கலைகள்பற்றி அறிந்துகொள்ள இந்நூல் உதவுமாயினும், தன்

பாலுள்ள ஆங்கிலச் சொல்வளத்தை வெளிப்படுத்தும் வகையில் ஆசிரியர் கையாண்டுள்ள நடையைப் புரிந்துகொள்வதில் தடை ஏற்படுகிறது. அச்சுப்பிழைகளை நீக்கி வெளியிடுதல் வேண்டும்.

—க. சி. கமலையா.

**பாவலர் போற்றும் பாவேந்தர்**

[தொகுப்பாசிரியர்: புலமைத்தாசன், புலமைப் பதிப்பகம், 2-ஏ பார்த்தசாரதி சந்து, சென்னை-5, விலை: ரூ 3-50]

86 பாவலர்கள் பாவேந்தரைப் பாராட்டியிருக்கும் கவிதைத் தொகுப்பு. பாவேந்தரின் புகழ்பரப்பத் தொகுப்பாசிரியர் மேற்கொண்ட முயற்சி பாராட்டத்தக்கது.

**முப்பாலில் முச்சீர் முத்துக்கள்**

[ஆசிரியர்: டாக்டர் கு. மோகனராசு, வள்ளுவர் கழகம், சென்னை-5, விலை: ரூ 2.50]

திருக்குறள் என்னும் ஆழ்கடலுள் மூழ்கி, பொருட் செறிவுடைய முச்சீர் முத்துகளைத் தொகுத்து அளிக்கிறார் இவ்வாசிரியர். திருக்குறட் கருத்துகளை எளிய முறையில் அறிந்துகொள்ள இந்நூல் துணைபுரியும்.

**விதியின் அமைப்பு (ஓர் அனுபவக் கண்ணோட்டம்)**

[ஆசிரியர்: அ. ந. அர்த்தனாரீசுவரன், 34 மாரியம்மன் கோயில் தெரு, சஞ்சீவிராயன் பேட்டை, சேலம்-636006, விலை: ரூ 15 00]

சோதிடக் கலையும், கைரேகைக் கலையும் ஒரு விதிமுறைக்குட்பட்டே இயங்கி வருகின்றன என்பதை நடைமுறையில் அறிந்து கூறுகிறார் இந் நூலாசிரியர். அத்துடன் ஒன்பது மணிகள்பற்றிய உண்மைகள், எல்லோருக்குரிய அதிர்ஷ்ட எண்கள் (Numerology) பற்றிய செய்திகளையும் படங்களோடு விளக்குகிறார்.

**The Structure of Fate—A Practical observation**

By A. N. Arthanariswaran, 34, Mariamman koil st, Sanjevi-rayanpettai, Salem-636006, Price Rs. 10/.

இது மேற்கண்ட 'விதியின் அமைப்பு' என்னும் நூலின் ஆங்கில ஆக்கம். ஆங்கிலத்தின் மூலம் சோதிடம், ரேகை சாத்திரம் ஆகியவற்றை அறிந்துகொள்ள விழைவோர்க்குப் பயன் தரும் நூல்.

**நட்சத்திரங்கள்**

[ஆசிரியர்: இமயபாரதி, பைரவி பதிப்பகம், 76, புனித சேவியர் தெரு, சென்னை-1, விலை: ரூ 3-25]

கவிஞர் இமயபாரதி அவர்கள் அவ்வப்போது ஏடுகளில் எழுதி வந்த கவிதைகளின் தொகுப்பே இந்நூல். புதுக் கவிதைகளும் மரபுக் கவிதைகளும் விரவிக் காணப்படுகின்றன. தெய்வம், நாடு, மொழி, சமுதாயம், காதல் ஆகியவைபற்றியும் சமுதாய விடுதலைக் குழைத்த பெருமக்களைப்பற்றியும் கற்பனை வளம் நிரம்பிய கவிதைத் தொகுப்பு. சிலம்பொலி செல்லப்பனாரின் பாராட்டுரையுடன் கூடிய நூல்.

### முருகன் புகழுரைகள் ஆயிரம்

[தொகுப்பாசிரியர்: முருகயோகலிங்க நம்பிகள், வசந்தம் வெளியீடு, 8, விசுவநாதபுரம், தெற்கு நங்கநல்லூர், தபால் நிலைய மேல் வீடு, சென்னை-600061, விலை: குறிப்பிடப்படவில்லை.

போற்றி—வெல்க—வாழ்க என முருகன் திருப்புகழை ஆயிரம் முறை அருச்சனை செய்யும் வகையில் அழகிய சொற்றொடர்களில் அமைத்து வழிபாட்டிற்கேற்ற வகையில் இச் சிறு வெளியீட்டினை உருவாக்கியிருக்கும் ஆசிரியரின் முயற்சியும் அதற்கடிப்படையான பத்தியும் வியந்து போற்றற்குரியன. இங்ஙனம் முருகன் திருவடிகட்கு அருச்சனைகளை வழங்கிய இவ்வாசிரியர் மிக இளமையிலேயே அம் முருகனடி சேர்ந்தமை வருந்தத்தக்கது. எனினும் எச்சமென அவர் விட்டுச் சென்ற இப் புகழுரைகள் ஆயிரமும் அவர் புகழை நிலைநிறுத்தும் சிறப்புடையன எனில் மிகையன்று.

### இளமையின் குரல் (அரையாண்டு இதழ்)

[சிறப்பாசிரியர்: மா. ரா. அரசு, டாக்டர் மா. இராசமாணிக்கனார் இலக்கிய மன்ற வெளியீடு, 5, இப்ராகிம் சாகிபு முதல் சந்து, சென்னை-600001, விலை: ரூ 2-00]

மறைந்த முனைவர் மா. இராசமாணிக்கனார் நினைவாகத் தோற்றுவிக்கப்பெற்ற இலக்கிய மன்றத்தின் அரையாண்டு இதழாக வெளிவந்திருக்கும் இவ்விதழின் முதல் குரல் வரப்பெற்றோம். இஃது அளவில் சிறிதாயினும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தூட்டும் வகையில் அமைந்துள்ளது. மன்றத்தார் முயற்சி பாராட்டத்தக்கது. இதழ்கள் பல அவ்வப்போது தோன்றி மறையும் இந்நாளில் இவ்விதழ் அரையாண்டிதழாக மலர்வதால் பயனுள்ள நல்ல கட்டுரைகளை வெளியிட்டு நீடினிது வாழ வாய்ப்புள்ளது, என்று நம்புகிறோம். இக்காலத்துக்குத் தேவையான குரல் இளமையின் குரல். எனவே இதற்கு நமது வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் (பகுதி-1)

[ஆசிரியர்: எஸ். இராஜு செட்டியார், பி.ஏ., பி.எல்., கம்பன் பதிப்பகம், 16, டி. பி. கோயில் வீதி, திருவல்லிக்கேணி, சென்னை-5]

தொட்டனைத் தூறும் அறிவுக் கேணியாக விளங்கும் திருக்குறளுக்கு இதுகாறும் நூற்றுக்கணக்கில் ஆராய்ச்சியுரைகள் வெளிவந்துள்ளன. அவ்வகையில் இதுவும் ஒன்று. இந்நூலில் ஆசிரியர் 'திருக்குறள் ஒரு வாழ்க்கை நூல்' என்னும் கருத்தை நிலைநாட்டுகிறார்

கல்லாமையும், அறியாமையும் அகன்றால் நாடு நலம் பெறும் என்னும் கருத்துடைய இவ்வாசிரியர் அதற்குரிய ஆதாரங்களைத் திருக்குறளி னின்று எடுத்துக்காட்டுகிறார். கடவுள் வாழ்த்துப்பற்றி இவ்வாசிரியர் கூறும் கருத்துகள் புதுமையானவை—சிந்திக்க வேண்டிய கருத்துகள். இங்ஙனமே பல்வேறு துறைகளில் பல்வேறு திருப்பங்களினின்று திருக்குறளை ஆராய்கிறார். உலகியலுக்குப் பயன்படும் வகையில் புதிய முறையில்—பகுத்தறிவுக்கு ஏற்ற முறையில் ஆய்வு செய்திருக்கும் இந் நூலாசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது. "பிரச்சினைகள் ஏன் பெருகுகின்றன?" என்னும் இறுதி அத்தியாயத்தில் இவ்வாசிரியர் கூறும் கருத்துகள் மிகவும் பயனுள்ளவை. மக்களின் இல்லாமையினை யும் கல்லாமையினையும் முதலாக வைத்து ஆட்சிப்பீட மேறுவோரால் நல்லாட்சி நடத்த இயலாது, பிரச்சினைகள் தீரா என்பதை இவ்வத்தி யாயம் நன்கு விளக்குகிறது. பயனுள்ள நூல்.

## வரப்பெற்றோம்

**தினசரி திருக்குறள் வாசிப்பு**

—கவி. குறளேருழவர், பாலு புத்தக மன்றம், 17-ஏ தெப்பக் குளம் மேற்தெரு, திருநெல்வேலி-6 ரூ. 1-50.

**புல்வெளி**

—தேவமைந்தன், ப. கலாவதி, எ. இ., அன்னை வெளியீடு, எச்-8, அரசுக் குடியிருப்பு, இலாசுப்பேட்டை, புதுச்சேரி, 605008, ரூ. 3-50.

**முருகன் புகழ்**

—கோப்பு. தி. கனகசபை செட்டியார், 98, நாணயக்காரத் தெரு, கும்பகோணம்.

---

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, பரல் ௧௧. ௩௧௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட். அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | விசாகநம்பி அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | வேப்பாக்கம் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள், சென்னை-10 | 5—00 |
| ,, | புலவர் ஆ. கந்தசாமி, சென்னை-1 | 50—00 |
| ,, | பா. தியாகராசன், நன்செய்இடையார் வேலூர் | 5—00 |

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி. லிட்.

# உள்ளுறை



*

---

# படங்கள்

---

## கழக நிலையங்களில் கிடைக்கும்
## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| எதிர் நீச்சல்—கடலூர் மணிமாறன் | 5 00 |
| முகைதீன் புராணம்—முதற்பாகம் —பேராசிரியர் மு அப்துல் கரீம் | 27 50 |
| நூற்றாண்டு கண்ட பாரதி—எழில முதன் | 7 00 |
| பாரதி ஒரு பார்வை—வலம்புரி ஜான் | 20 00 |
| ரவிகுல திலகன்—செம்பியன் | 18 00 |
| கம்பரின் சமயக் கொள்கை—டாக்டர் ம. பொ.சி | 9 00 |
| தங்க முத்துக் கரையினிலே—ப. இளவழகன் | 30 00 |
| ம. பொ. சி.யின் இலக்கிய நூல்கள்—ஒருமதிப்பீடு —டாக்டர் பா அன்பு | 20 00 |
| காற்றின் கதை—கல்வி கோபாலகிருஷ்ணன் | 18 00 |
| யாரோ பார்க்கிறார்கள்—ராஜேந்திர குமார் | 10 00 |
| தாயுமானவர்—டாக்டர் மூ. வரதராசன் | 2 75 |
| நக்கீரர் - ஓர் ஆய்வு—டாக்டர் மு பரி.மு. இராமசாமி | 42 00 |
| நிலாமுற்றம்— விஞர் வேலூர் ம. நாராயணன் எம்.ஏ; | 8 00 |
| அக்கினி அரும்புகள்—பருத்தியூர் பாலு | 5 00 |

---

## கழகப் புதிய வெளியீடுகள்

**முல்லாவின் கதைகள் முப்பது**

**ஆசிரியர் : கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்.**

அரபு நாட்டு முல்லாவின் கதைகளுக்கு ஒப்பான நம் நாட்டுப் பழங்கதைகளுள் முப்பது கதைகளின் தொகுப்பே இந்நூல். சிறுவர்கட்குப் புதிய பட்டறிவினைத் தரவல்ல கதைகள் ரூ.5-00

**பாரதியும் - திரு. வி. க. வும்**

**ஆசிரியா: டி. வி. சங்கரக்குமாரு நல்வழிக் கல்வியாளர், திருநெல்வேலி**

பாரதியார் ஒரு புயலாகத் தோன்றி நாட்டு விடுதலைக்குப் பணியாற்றினர். திரு.வி.க. தென்றலாகத் தோன்றி தீந்தமிழ்ப் பணியும் நாட்டுப் பணியும் ஆற்றினர். அந்தப் புயலும் தென்றலும் பற்றியதே இந்நூல். ரூ. 3-50

**வையை வளம்**

**—கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்.**

பாண்டிய நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகை செய்யும் வைகை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்பங்களிலிருந்தும் ஆராய்ந்து எழுதப்பெற்ற அரியநூல். ரூ. 7-00

**STUDIES IN TAMIL LITERATURE AND HISTORY**

—Prof V.R. Ramachandra Dikshitar, M.A.

பல்லாண்டுகளாகக் கிடைக்கப் பெறுகிருந்த இந்நூல் புதிய மறு பதிப்பாக வெளிவந்துள்ளது. பிற மொழியினரும் இதன் மூலம் தமிழ் இலக்கிய மாண்பினையும் வரலாற்றினையும் அறியலாம் ரூ.40

பதிவு எண். 4899 Aug 1983

# Asian Educational Services

(NEW DELHI-110 016.)



## REV. M. WINSSLOW'S

# ENGLISH - TAMIL DICTIONARY

பல்பொருள்களை விளங்க உரைக்கும் இவ்வகராதி
கல்லூரி, மேல்நிலைப் பள்ளி, கலைக்கூடங்கள்
ஆகியவற்றின் நூலகங்களிலும், கற்றோர்
இல்லங்களிலும் இருக்க வேண்டிய
ஓர் அரிய அகராதி.

பக்கங்கள் : 1520

மிகக் குறைந்த விலை: ரூ. 80/-

---

கிடைக்குமிடங்கள் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-108.

கிளைகள் :

91, கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி-6.
50/51, மேலமாசி வீதி, மதுரை-1.
22/819, ரங்கே கவுடர் வீதி; கோயமுத்தூர்-1.
28, உயர்பள்ளிச் சாலை, கும்பகோணம்-1.
24, நந்திகோயில் தெரு, திருச்சிராப்பள்ளி-2

அப்பர் அச்சகம், சென்னை-108.